# பூங்கோதை



கவிஞர்
கலைக்கூத்தன்

# பூங்கோதை

கலைக்கூத்தன்



அவ்வை பதிப்பகம்
AUVAI PUBLICATIONS
JN 1-8-11-'B' WING
SECTOR 9-VASHI
NEW BOMBAY-400 703.

## எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்!
## புதிய தமிழ் எழுதுக!

## இந்நூல்

தமிழ்நாடு அரசின் புதிய தமிழ் எழுத்துச்
சீர்திருத்தத்தின் அடிப்படையில்
பதிப்பிக்கப்பட்டுள்ளது.

பதிப்பகத்தார்

# அணிந்துரை

கலைக்கூத்தன் இயற்றியபூங்
    கோதை என்னுங்
காப்பியத்தைக் கருத்தூன்றிப்
    படித்தேன்: இந்நூல்
நிலைத்தபுகழ் பெறத்தக்க
    நூலே என்று
நெஞ்சுகந்து வாழ்த்துகின்றேன்!
    நீணி லத்தில்
புலைத்தனமும் பொய்யொழுக்கும்
    பொறாமைப் பேயும்
புகலிடத்தைக் காணாமல்
    பொன்றி னல்லால்
உலுத்தகுணக் கயவர்களும்
    ஒழியா விட்டால்
ஓங்காது பண்பாடென்
    உயர்ந்த கொள்கை!

இத்தகுநற் காப்பியங்கள்
    கற்க வேண்டும்
என்னுமனப் பான்மையினை
    எவருங் கற்று
மெத்துபுகழ் பெற்றிடுமா
    றின்னும் பன்னூல்
மேதினிக்கு வழங்கிடுமா
    றிவற்கு மேலும்
வித்தகமார் நூலியற்றி
    விளங்கும் பேற்றை
விதிநல்க வேண்டுமெனும்
    விருப்பந் தன்னால்
சித்தமகிழ்ந் தென்வாழ்த்தைச்
    செப்பு கின்றேன்
சீருடனே பலவாண்டு
    செழித்து வாழ்க!

வே. கி. வேணுகோபாலப்பிள்ளை

# ஆராய்ச்சி முன்னுரை

டாக்டர் வை. இரத்தினசபாபதி,
வித்துவான், பி. ஓ. எல்., எம்.ஏ., பிஎச். டி.,
சைவ சித்தாந்தத் துறைத் தலைவர்
சென்னை பல்கலைக்கழகம்

## முன்னுரை

பூங்கோதை. ஆம்! ஓர் அருமையான கவிதைக் காப்பியம்.

தமிழ் மொழியை அழைத்துத் தனக்குப் பாட்டும் பொருளும் தாவெனக் கேட்டு, பெற்றுப் பாடும் தமிழ் நாக்கு. தமிழகத்துத் தஞ்சை மண்ணில் தரமாக முளைத் திருந்த தமிழ்ச் செடியைக் காலத் தச்சன் பம்பாயில் பெருந்தூய்மைப் [மா + துங்கா = பெரிய தூய்மை] பூங்கா வினுள் பதிய வைத்தான். காலப் போக்கில் மலர்ந்த தமிழ் மணப் பூக்களின் இணைப்பே பூங்கோதை! ஔவைக்குத் தந்தையாகிய ஆசிரியர் தமிழநம்பி கலைக் கூத்தக் கவிஞரின் காலத்தோடு இணைந்து தந்த இரண் டாங் குழந்தை இப் பூங்கோதை.

இருநூற்றைம்பது கவிதைகளில் பூங்கோதை மணம் வீசுகிறாள்; பாத்திரங்களே நேரிற் பேசுவது போல அமைப்பைக் கொண்டு, இடையில் தொய்வு படாமல் சென்று முடிகிறது; எடுத்தவரை இடையே மூடிவைக் காமல் விறுவிறுப்புடன் முடிவுவரை இழுத்துச் சென்று சுவைக்க வைக்கும் திறன் படைத்த சமுதாய சீர்திருத்தக் காப்பியம்.

பக்திக் காப்பியமன்று; ஆன்மீகச் சாந்தியை—அறி வுக்கு அப்பாலே அகண்டெழுந்த பரஞ்சோதியாய் விளங் கும் கடவுளை இழுத்தோ தொடுத்தோ விளக்கமோ விரி

வுரையோ காட்டாமல் அறத்தில் முளைத்து, அறத்தால் வளர்ந்து, அறத்தில் முடிந்து அமைதி கொள்ளும் தமிழ்க் குடும்பத்தின் ஆற்றல் மிகுந்த அறநெறிக் காப்பியமே பூங்கோதை.

ஆம். அப்படிக் கொள்வதுதான் முறை.

தனிமனித வாழ்க்கையும் சமுதாய வாழ்க்கையும் தனிமலரும், தனிமலர்களின் இணைந்து மிக்கெழும் மாலையும் போன்றவைகளே.

செடியிலோ கொடியிலோ கொம்பிலோ புதரிலோ தனித்திருந்த காலத்தில் சிறப்புப் பெற்றிருந்த மலரானது மாலையாக இணைந்த போதும் அதே சிறப்பைப் பெறும் என்று சொல்ல முடியாது.

தனிமலர்களின் இணைப்புத்தான் மாலையென்றாலும், அது தனிமலர்களை விளக்கவுஞ் செய்யலாம்; அமுக்கவும் செய்யலாம். அதற்குக் காரணம் தொடுக்குங் கலையாற்றல் என்று ஒருவன் சொல்வானானால், தனிமனித வாழ்வின் வீழ்ச்சிக்கும் வளர்ச்சிக்கும் விதியாற்றல் என்று மற்றொருவன் சொல்லலாமல்லவா! பூங்கோதை உணர்த்தும் வாழ்வியல் முறையும் அப்படித்தான்.

தனிமனித வாழ்க்கையின் முடிவிடங்கள் என்று சொல்லப்பெறும் சமாதிகள், கல்லறைகள், பள்ளியிடங்கள் ஆகியவைகள் தியாகத் தெய்வ நிலையங்களாக, ஆன்மீக வெளியீட்டுத் திருத்தலங்களாக, வருங்காலச் சந்ததியினரின் வாழ்வியல் மாற்றங்களை-உயர்வுகளை-ஏணிப் படியென ஏற்றிவிடும் திருவிடங்கள் என்று கருதும் காட்சி அமையுமானால்;

திருமூலர் சமாதியும், போகர் முதலிய முனிபுங்கவர்களின் சமாதிகளும் தெய்வத் திருநிலையங்களாக அமையுமானால்;

தூய பால் முதலிய ஆன்மீகச் சான்றோர்களின் திரு வுடலம் துயிலும் கல்லறைகள் போன்றவையெல்லாம் புனிதத் தெய்வ இடங்களென அமையுமானால்;

மதீனா நகரில் நபிகள் நாயகத்தின் திருவுடலம் தாங்கி விளங்கும் பள்ளிவாசல்—உலகமக்களெல்லாம் உயர்வு பெறு வதற்குரிய ஒரு வாசல் பள்ளிவாசல் தெய்வத் திருநிலைய மாக அமையுமானால்;

பூங்கோதையின் கல்லறையும் அப்படித்தான். சமு தாயத் தொண்டு முகிழ்க்கத் தக்கதொரு அறந்துஞ்சு திருவிடமாக அது மலர்ந்து விடுகிறது.

தனி வாழ்க்கையில் கண்ணகிக்குக் கிடைத்த தோல்வியே பூங்கோதைக்கும் கிடைக்கிறது. கண்ணகிக்குக் கற்கோயிலும் சொற்கோயிலும் அமைத்து, அனைவரையும் அழைத்து வணங்கச் செய்தார்கள் சேரநாட்டுச் செம்மல்கள். ஆனால் பூங்கோதைக்குச் சமுதாய சீர்திருத்தக் கோயில் சுமார் பத்து லட்சரூபாய் மூலதனத் தோடு கட்டிய கலைக்கூத்தனார், அனைவரையும் வந்து வணங்கச் சொல்லவில்லை; சமுதாயச் சீர்திருத்தத் தொண்டின் துவக்க விழாவைத் துடிப்புடன் கொண்டாடிச் செயல் மேற்கொள்ள வைக்கிறார். உள்ளத்து உறவுமுறை பற்றிய ஒருவனைத் தலைவனாக்காமல், உள்ளத் துறவு முறை பற்றிய ஒரு பழுத்த துறவியை-சமுதாயப் பிறப் புரிமைத் தொண்டுள்ளம் மேவிய துறவறத்தானைத் தலைமையேற்றுப் பணிபுரிய வைக்கிறார். பூங்கோதையின் கல்லறை, வணங்கும் இடம் மட்டுமன்று; வாழவைக்கும் தொண்டுக் களம்.

## வாழ்கின்றாய் வாழாத சமுதாயமே !

சற்றேறக்குறைய ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன் தென்தமிழ்ப் பாண்டி நாட்டிலிருந்து காசிக்குப் போக நினைக்கிறான் ஒருவன். அவன் குடும்பத்தில் அதிகப் பேர்

இல்லை. அவனும் அவன் மனைவியும்தான். அக்காலத்தில் காசிக்குச் சென்று வருவது என்பது எளிமையுடையது ஒன்று அன்று. 'நிலையாமை' என்ற தத்துவம் எத்தனை யெத்தனைக் கோணங்களில் நினைக்கப் பொறுமோ, அவ்வளவுக்கும் இடங்கொடுக்கும் சூழ்நிலையுள்ள பயணம் அது.

அவன் மனைவி கலங்குகிறாள். செல்லுகின்ற நீங்கள் நலமாக வருவீர்களா? என்ற கேள்விக் குறியை அவள் நினைக்கவில்லை.

தனித்திருக்கிறேனே! இளம் பெண் தனித்திருக்கிறேனே!! உணவுக்குரிய பொருளும் கிட்டப் பெறாத ஏழ்மை நிலையில் தனித்து இருக்கிறேனே!!! வயிற்றைக் காக்கவேண்டும் வளர்ந்துவரும் மானங்காக்கவேண்டும். கணவன் திரும்பி வந்தபின் கணவனுக்கே உரியவளாகும் முறையில் கணவனுக்கேயுரிய எல்லாவற்றையுங் காத்து, கணவன் கண் நிறைய, கருத்து நிறைய அக் காரிகை கொடுக்க வேண்டியவளாயிற்றே!

கலங்கும் அக்காரிகைக்கு அவள் கணவன் பட்டாளத்தையும் பங்களா வாழ்க்கையையுமா அமைத்து விட்டுப் போனான்! "அரசின் ஆணை காக்கும்" என்ற வார்த்தைகளைத்தான் சொல்லிவிட்டு சென்றான். காசிக்குப் போனவனும் வந்தான்; காரிகையும் கட்டுக்காவலோடு காத்த தன்னையே கொடுத்துக் குலவினாள்.

ஊரறிய நடுத்தெருவில் உழைப்பால் வாழும் குடும்பம். சில மணிநேரம் உழைப்புக்காக வெளிச் செல்லும் தாய்க்குப் பரிதவிப்பு. பெண் தனித்திருக்கிறாளே என்ன ஆகுமோ! எது நடக்கக் கூடாது என்று எண்ணினாளோ, அது நடந்து விட்டது. குற்றம் யாருடையது?

தனித்து நின்ற பூங்கோதையா? உழைத்து வாழ ஒருப்பட்ட அன்னம்மாவா? சமுதாயச் சூழலா? சிக்கலா? விதியா? இவைகளில் எது முன்னே காசிக்குப் போனவன்

வாழ்ந்த சமுதாயத்தில் இல்லை? எது பூங்கோதை வாழ்ந்த சமுதாயத்தில் புதியதாக முளைத்து விட்டது?

முன்னது உண்மையானால் பின்னது போலி. முன்னது கற்பனையானால் பின்னது உண்மை. அறிவாலும் பண்பாலும் வளர்ந்துவரும் சமுதாயம் என வக்கணை பேசும் சிந்தனையாளர்களின் நெஞ்சுக்கு நீதி கேட்டுக் கலைக்கூத்தனார் எடுத்து நிறுத்தும் வாழ்வியற் போக்கின் தொகுப்பே பூங்கோதைக் காப்பியம். வளர்ந்துவிட்ட சமுதாயம் என்று மார்தட்டும் இற்றை நாளிற் புரையோடிப் புழுத்துப் போயிருக்கும் சாக்கடைச் சமுதாயமே இது என எடுத்து நிறுத்திய கற்றூணே பூங்கோதையின் மெய்க்கீர்த்திக் குன்று.

வீட்டின் முகப்பிலே, தெருவிலே, காலையில் எழுந்ததும் பெண்கள் சாணம் கரைத்த தண்ணீர் தெளித்து, பெருக்கிக் கோலமிட்டுத் தூய்மை செய்கிறார்கள். அதே வீட்டின் உட்புறத்திலே படுத்த பாய் சுருட்டப் பெறாமற் கிடக்கும்; அவிழ்த்துப் போடப் பெற்ற துணிகள், கிழித்துப் போடப்பெற்ற காகிதங்கள் அங்கங்கே கிடைக்கும். இன்னும் சமையலறைவரை உள்ளே சென்றால் எத்தனையோ அலங்கோலங்கள். சொல்ல முடியாத தூய்மைக் குறைவுகள். தூய்மை உள்ளே இல்லை; வெளியிலே; வாசல் முகப்பிலே; வீட்டை ஒட்டிய தெருவோரத்திலே !

உடையைத்தான் எடுத்துக் கொள்ளுங்களேன்! மேற்சட்டை வெள்ளையாக, தூய்மையாக இருக்கும்; பணியன் அழுக்கு. கேட்டால் உள்ளே இருப்பதுதயனே என்பான்.

உடலுக்கு ஊட்டமும் வலிமையும் தரும் சமையலறையும் படுக்கையறையும் தூய்மையாக இல்லை; மற்றவர்கள் மதிப்பீட்டுக்காக நிற்கும் வீட்டின் முகப்பிடம் தூய்மை.

உடலோடு ஒட்டி, உடலோடு உறைந்து, உடலுக்கு நன்மை தரவேண்டிய உள்ளாடையில் தூய்மையில்லை; மேற்சட்டை தூய்மை. இதுவே சமுதாயத்தின் பிரதிபலிப்பு.

மனத்தில் தூய்மையில்லை; தூய்மையைப் பேணுவோர் வாழ வழியில்லை. குளக்கரையிலே ஓர் அருமையான பகுதி—குளிக்க வரும் பெண்கள் பேசும் கும்மாளப் பேச்சு.

''வீட்டுக்கு வீடு வாயிற்படி''—இதுதான் கவிஞரின் பேச்சு. எவ்வளவு பெரிய செய்தியை எவ்வளவு எளிதாக மூடி மறைத்து முழுக்கும் போட்டு விடுகிறார்களே இப் பெண்கள்!

இல்லை! ஏ வாழ்ந்து கொண்டிருக்கிறேன் என்று கூறும் மனித இனமே! உன் வாழ்க்கை இதுதானா? என்று எண்ணி எண்ணி, இனி எண்ணவும் முடியாது என்ற நிலைமை உண்டாகி, எண்ணிய நெஞ்சும் வெடித்து, இரத்தமாகப் பீறிட்டுச் சிதறி விழும் காட்சியின் பிரதிபலிப்பன்றோ கவிஞர் கலைக்கூத்தனார் வடித்த குளக்கரை ஓவியம்.

பெண்மை-ஆம், பிரச்சினைகளுக்கெல்லாம் மூலம் அந்த ஒன்றுதான். தமிழகத்திலே ஒரு நீதிபதி இருந்தாராம். கொலை வழக்கு என்றால் இதில் சம்பந்தப்பட்ட பெண் யார்? என்றுதான் முதல் கேள்வி கேட்பாராம். பெண்ணே இல்லாத கொலை வழக்கு என்றால், வழக்கைத் தள்ளிப் போட்டு விட்டு, இதில் ஈடுபட்ட பெண் ஒருத்தி இருப்பாள், அவளையும் கண்டுபிடித்துக் கொண்டு வந்து நிறுத்திய பிறகு வழக்கை விசாரிக்கலாம் என்பாராம்.

பெண்களைக் காமப் பொருளாகவே கருதுவது; அந்த ஒன்றுக்கே இரையாக்குவது என்ற கொள்கையைக் களைந்தெறிவதற்குப் பாடுபட்ட சமுதாயத் தொண்டர்கள் பலர்.

தாய் தனக்குப் பிறந்த ஆண் குழந்தையைப் பார்ப்பதும், தந்தை தனக்குப் பிறந்த பெண் குழந்தையை அளவுக்கு மேல் பாசக்கரம் நீட்டி நேசிப்பதும் காம எண்ணத்தின் மறைமுகத் தீர்வுகள் என்பது மனோ தத்துவம்.

'இகழ்ந்து கூறியும் ஏசியும் கடிந்தும் இழித்துரை கூறியவன் என்றும் கருதாது புதுவோன் பின்னே போனது என் நெஞ்சம்; இதுவோ அன்னாய் காமத்து இயற்கை!' என்று தன் அனுபவத்தால் சமுதாய அடிப்படைச் சிக்கலை நோக்கிய மணிமேகலையானவர் காம எண்ணத்தால் கண்டவாறு திரியும் மக்களுக்குக் கனிவோடு அறிவுரை கூறியே தெருட்டலாம் என்று ஈடுபட்டவள் மணிமேகலை. உடலழகுதானே, மணிமேகலை கூறுகிறாள்: 'பெண்களின் உடல், ஏன்? மற்றவர்களின் உடலுங்கூடத்தான், மேலே நோக்கும்போது எவ்வளவு அழகு. அதே உடலைக் கத்தியால் கீறித் திருப்பிப் பார்த்தால், சீ! சீ!! என்று வெறுத்தொதுக்கும் தன்மை உடையதுதானே! பருந்து கொத்தித் தின்னுவதற்குத்தானே இந்தப் பாழும் உடல் தகுதியுடையது!' என்று அறிவுரை கூறினாள். எனினும் பெண்மை காரணமாக நடைபெறும் தவறுகளுக்கு, முற்பிறப்பைக் காரணங்காட்டிச் சமாதானம் சொல்லக்கூடிய அளவுக்குத்தான் இலக்கியப் பணி சென்றிருக்கிறது.

மாணாக்கனுக்கு ஆண்டுக்கு ஒரு முறைதான் தேர்வு; பள்ளிக்கூடத்துக்கு ஆண்டுக்கு ஒரு முறைதான் தணிக்கைத் தேர்வு; அரசியல் வாதிக்கு ஐந்து ஆண்டுக்குக்கு ஒரு முறைதான் தேர்வு; தேர்வு என்ற ஒன்றைச் சந்திக்காமலேயே வாழ்கிறவர்களுங்கூட இருக்கத்தான் செய்கிறார்கள். ஆனால் பெண்மைக்கு நாள்தோறும் கற்புத் தேர்வு நடத்திய காலத்தையும் அறிவோம்.

பரசுராமனின் தாய், ஆம், முனிவரின் மனைவி. நாள்தோறும் பச்சை மணலால் பானை செய்து, கற்புத் தீயினால் அதைச் சுட்டுப் பானையாக்கித் தண்ணீர் எடுத்து வர வேண்டும். தவறியதற்கு என்ன தண்டனை? ஒரு நாள் நதிக் கரையில் மணலைப் பானையாக ஆக்குபோது, விண்வழியே சென்ற விஞ்சையன் ஒருவனின் உருவம் தண்ணீரில் தெரிந்தது. மேலே நிமிர்ந்து பார்த்து, இவ்வளவு அழகு

டையவனும் இருக்கின்றானோ ! என எண்ணினாளாம். அதுதான் குற்றம். பானை கூடவில்லை; தண்டனை, பரசுராமனால் வெட்டப் பெறுகிறாள்.

மேலே குறிப்பிடப் பெற்றது போன்ற சமுதாயக் குற்ற முடையவர்களை வெட்டினால், அவர்கள் இரத்தம் சிந்தும் அந்த இரத்தத் துளி நனைந்த மண்ணில் தோன்றிய சந்ததி யினரும் அதே குற்றம் செய்வார்கள் என நினைத்துத்தான் போலும் தமிழகத்தில் நாற் சந்திகளிலும், முக் கூட்டுக் களிலும் பூதங்களை நிறுத்தியிருந்தார்கள். சமுதாயக் குற்றம் புரிந்தவர்கள் வந்தால் விழுங்கி விடுவது: அதுதான் அதன் வேலை. கற்பிழந்தவர்களை — கற்பழித்தவர்களை விழுங்கச் சதுக்கப் பூதம்; தவத்தில் தவறிய ஓராயிரம் பேரை உண்டு விழுங்க ஒரு பெரிய பூதம் - இப்படி அமைத்த வரலாற்றையும் காண முடிகிறது.

ஒன்று மட்டும் உண்மை. பெண்மை சம்பந்தமான சமுதாயச் சீர்கேடுகளை நீக்க எவ்வளவு வழிமுறைகள் கண்டு பிடிக்கப் பெற்றாலும் இறுதியில் தோல்விதான் முடிந்த பயன் என்பதை உணரவேண்டும்.

பெண்களை நிர்வாணமாக ஆக்கிப் பார்ப்பது எத் துணைக் கொடுமை. அறையிலன்று; அம்பலத்தில், கணவன்மார்களுக்கு முன்னால், திரௌபதியின் ஆடையை நீக்கி, நிர்வாணமாக்கி, அவையில் நிறுத்தி, அவளைப் பின்னர்த் தொடையில் இருத்த வேண்டும் என்று செயல் புரிந்த துரியோதனன் சபை எத்துணைக் கொடுமையுடை யது என எண்ணிப் பார்க்கவேண்டும். அத்தகைய கொடுமை நாம் வாழும் இக்காலத்தில் இல்லை என்று கூடப் பெருமை கொள்ளலாம்.

பூங்கோதையையும் அன்னம்மாவையும் தம் நெஞ்சு நிறையும் முறையில் பண்புகளின் கொத்தாக, குலையாக, படைத்து வெற்றி கண்ட கவிஞர் கலைக்கூத்தனார், "குளக்கரையில்" என்ற பகுதியில் அரியதொரு புரட்சிப்

பாதை அமைத்துக் காட்டுகிறார். மணிமேகலை மேற் கொண்ட முயற்சியைவிடச் சிறந்ததொரு புரட்சி. ஆண்மையினம் காம நினைவில் தவறுவோமோ என்ற வாய்ப்பு வரும்போது ஒருமுறை படித்தால், அப்பகுதி அவனைக் கவசமெனக் காக்கும்.

'புலால் உண்ணுதல் கூடாது' என்பதை எப்படி வற்புறுத்தலாம் என எண்ணிய திருவள்ளுவர், மற்றை உயிரினுடைய புண், இரத்தமும் நிணநீரும் வழிந்தோடும் புண்தானே, நீ உண்ண இருக்கும் புலால். புலாலைப் புண் என இழிவுபட எடுத்துக் கூறித் திருத்த முற்பட்டார்.

இதே பாணியைத்தான் மணிமேகலை கைக்கொண்டாள் பெண்ணின் உடல்தானே. திருப்பிப் பார்த்தால் பருந்தும் கழுகும் கொத்தித் தின்ன எண்ணும் பிணந் தானே! என இழிவுபடுத்திக் காட்டுவதன் மூலம் திருத்த முயன்றாள். இத்துறையில் கலைக்கூத்தனார் செய்த புதுமை முன்னையவர்களைவிட முற்பட்டுச் சென்ற புரட்சி என்னலாம்.

சமுதாயத்தை ஆற்றங்கரையில், குளக்கரையில் கோயிலில்தான் சந்திக்க முடியும். தனிமனித் வாழ்க் கையை விமரிசனம் செய்ய அமைந்த பொது விடங்களே இவை என்னலாம்.

குளக்கரைக்கு வந்த ரமா, சாந்தி, வள்ளி ஆகியோர் வம்பு பேசுகின்றனர். புதுமை [வம்பு-புதுமை] அதுவும் ஆசிரியர் செய்யும் அருமையான புரட்சி. இரண்டு பேர் சேர்ந்து மூன்றாமவரைப் பற்றிப் பேசுவதுதான் இங்குள்ள மரபு. ஆனால் இங்கே சேர்ந்தவர்கள் எப்படியோ தங்களுக்குள்ளேயே பேச்சை முடித்துக் கொள்ளுகிறார்கள். விரசமில்லாமல் தங்கள் வாழ்வியல் விளக்கத்தை எடுத்துக் கூறிய முறையில் ஆசிரியர் பெற்ற வெற்றிக்கு இணை இல்லை. பெண்கள் உள்ளத்தைச் சற்றே திறந்து பார்த்தால்,

உண்மையிலே உத்தமிகான்
என்பான் தேடி
உன்மனத்தைப் புறத்தெடுத்துத்
துருவிப் பார்க்க
அண்மையிலே எப்புதுவிஞ்
ஞானி மற்றும்
ஆண்டவனா லுங்கூட
முடியா தென்ற
உண்மையினை நன்குணர்ந்த
படியால் பெண்கள்
ஒற்றுமையாய்ப் பொய்பேசி
வாழு கின்றோம்

என்று சென்னாளே! அதை மட்டுமா சொன்னாள்! ''வீட்டுக்குவீடு நிலைப்படிதான்; சும்மாவிடு பேச்சை'' என்று நாசூக்காகச் சொல்லிவிட்டாளே!

பிறருக்குத் தெரியாதிருந்தால் - ஊரறியாதிருந்தால் பரவாயில்லை, ஒத்துக் கொள்ளலாம் என்று சமுதாயத் தொண்டின் நாயகியாக நின்று காட்டிய அன்னம்மா கூட நுட்பமாக இதை ஒத்துக் கொண்டு விட்டாளே!

ஆண்மையானது பெண்மையை இவ்வாறு நினைத்தால் ஓரளவு அது தன்னையே தான் காத்துக்கொள்ள இயலும். இவ்வாறே பெண்மையும் ஆண்மையை எண்ணித் திருந்த முடியும் என்று ஆசிரியர் நுட்பமாக விளக்கிக் காட்டவும் செய்கிறார்.

குளக்கரையில் பேசிய பெண்கள் இப்படியென்றால் அப்படிக்கு ஒத்த அளவில் இருப்பவன் வேம்பையன் தானே!

வேம்பையன் பூங்கோதைக்கு ஒரு முடங்கல் எழுதி, ரமா மூலம் கொடுத்தனுப்பிப் பூங்கோதையைச் சரிக்கட்ட எண்ணுகிறான்.

''அடுத்தவரும் தாம்விலகிச்
செல்லா வண்ணம்
அழகுவலை வீசுகின்ற
பாவாய்! வேட்கை
விடுகதைக்கும் உட்பொருளே!
மயக்கம் நீங்கா
வேகமது உள்ளிருக்கும்
சொம்பே! இன்பம்
கொடுத்தபடி யேயிருப்பேன்
செய்க'' என்றான்.

''சரியென்றோ நான்சொல்வேன்
வேம்புன் ஆசைத்
தவிப்பதனை உணர்கின்றேன்
அப்பூங் கோதை
சரியாக என்னிடத்தில்
பேசாள்; முன்பு
சரிசெய்தார் நிலைமையெலாம்
வேறு! பார்த்தே
உரியவழி சொல்லுகின்றேன்
ஆனால் 'உன்னை
ஒருபோதும் மறந்துவிட
மாட்டேன்' என்றே
எரியுமகல் விளக்கணைத்தே
ஆணை தந்தால்
இயன்றவரை முயல்கின்றேன்''
என்றாள் கேட்டும்

கேட்காமல் நின்றிருந்தான்
'சரியா' என்றாள்;
'கேட்டதுனைச் சரியில்லை'
என்றான்; சொல்லில்

சூட்சமங்கள் ஏனென்றால்;
'அதுஇல் லாமல்
சுகங்காண வழியில்லை'
என்றான்; ஊரில்
ஆட்கள்இன்றிப் போனதுபோல்
தவிப்புஏன்?' என்றாள்
'அவளுக்கு மாற்றார்கால்
தூசி' என்றான்;
'கேட்கின்ற என்னையுமா?'
என்றாள்; மீண்டும்
கேட்காதே அதுபற்றி
என்றான்; சென்றான்!

எவ்வளவு அருமையாகத் தொடங்கினான்; எத்தனை பேரை ஈடுசெய்து கொடுத்த ரமாவுக்கு வேம்பையன் தந்த பதில் என்ன அவள் கேட்டதுதான் என்ன? என்னை மறக்க மாட்டேன் என்று அகல் விளக்கை அணைத்து ஒரு சத்தியம் செய்து தரவேண்டும் என்றாள். என்னைத் தவிர வேறு ஆட்களை உன் இன்பத்துச்கு ஈடுபடுத்திக் கொள்ளாதே என்று தடையா விதித்தாள்! எவ்வளவு இரக்கந் தோய்ந்த பேச்சு ரமாவினுடையது!

இந்த இரண்டு பகுதிகளையும் இருபாலாரும் படித்து உணர முற்பட்டால், இருபாலாரும் ஓரளவு தத்தம் நெறி களில் தவறாது நின்று ஒழுகுவதற்கு உரிய வாய்ப்பாகும்.

'வழக்கிற்கு மாறாக உரையேன்? என்ற தமிழ் மரபு காத்து, தமிழ்க் கவிதைக் காப்பியம் அமைத்த ஆசிரியர், புதுமைப் பாதையையும் அமைத்துக் கொடுத்துச் சிந்திக்க வைக்கிறார்,

சமுதாயச் சீர்திருத்தம் பேசுவோர்களுள் பெரும்பா லோர் சமுதாயத்திலுள்ள ஓட்டை உடைசல்களைத் துல்லி யமாகப் பேசிடுவர், தீர்க்கும் வழி என்ன? என்ற வினா எழும்போது நழுவி விடுவார். பிரச்சினைகளைத் தீர்க்கும் வழி இது எனவும் காட்டுகிறார், காட்டும் முறையும் பழமை

யில் விளைந்த புதுமை. புதுமை வழி வகுத்த புத்தமுதக் காப்பியனாரை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

## பாத்திரங்கள் பேசுகின்றன

பூங்கோதை. ஆம்! அவள்தான் காப்பியத் தலைவி! தான் கொய்த மலர்களைத் தன் மடியிலேயே போட்டுக் கொண்டு, தானே நூலெடுத்து, தானே கட்டி, இறுதியில் தானே வீசியெறிந்து விடுகிறாள் நடுத் தெருவுக்கு. இது தான் பூங்கோதை நமக்கு அறிமுகமாகும் முறை.

வீசியெறியப் பெற்ற மாலை வீணாகி விடவில்லை. ஏசுவதற்கும், பிறர் கண்டு எள்ளி நகையாடுவதற்கும், நாலு பேரின் இரக்கத்திற்கும் கருப் பொருளாக ஆகாமல், எவனுக்காக, எவனுடைய ரசனைக்காகத் தொடுக்கப் பெற்றதோ அவனிடமே சேர்ந்து விடுகிறது. வீசியெறியப் பெற்ற மாலை உரியவனைச் சேர முடிந்ததேயொழிய, அவனுக்குரிய அனுபவப் பொருளாக-அவனுடைய ரசனை யின் கொள்கலமாக அமைய முடியவில்லை. இதுவே மாலை யின் முடிவு மட்டுமன்று; மாலை தொடுத்த பூங்கோதையின் முடிவும் ஆகும்.

யாராலும் சூடவில்லை யென்றாலும், சூட்டிக் கொள்ளுதற்குரிய தகுதி இழந்துவிட்ட பூங்கோதை; கசக்கி முகர்ந்து களைந்து எறியப் படவில்லை யென்றாலும், தூசி நிறைந்த நடைபாதையில் தெருவில் வீசியெறியப் பெற்று, நடப்போர் காலில் பட்டு இடறும் அளவுக்குக் கீழ்மைத் தன்மை அடைந்து விட்ட பூமாலையானது பூபாலனை அடைந்தது போலவே, உரமற்று உணர்ச்சியற்று, வள மான கற்பனை சேர் கவிதை பூக்கும் வண்மைத் திறமற்று, வாயற்று, வாடிய, கசங்கிய மலர்க் குவியலெனத் தன்னை ஒப்படைத்து விடுகிறாள். அவன் எடுத்த பின் பிணமாகி றாள். பூங்கோதைக் கதை முடிவை-பொலிவிழந்த துன் பியலை எடுத்த எடுப்பிலேயே கொடுத்து விடுகிறார் கவிஞர்.

இந் நூலாசிரியர் கவிஞர். ஆகையால் தம்முடைய காப்பியத்தின் நாயகப் பாத்திரங்களைக் கவிதை மழை பொழியும் கவிக்குலத்து நாயகர்களாகவே படைக்கிறார்.

பூபாலனும் பூங்கோதையும் படிக்கும் பள்ளி ஒன்று தான்.

"நானோஇன் றொரு பரிசைப்
பெற்றேன்; முன்பு
நம்பள்ளிப் பரிசனைத்தும்
நீயே பெற்றாய்"

என்ற தொடக்கம் சுவையானது. பரிசைப் பெற்றோர் பூரிப்பர். பரிசை இழந்தோர் பொறாமை எய்துவர். ஏதோ விளையாட்டுத் துறையில்தான் இத்தகைய மன எண்ணத்தை மாற்ற முயலுகிறார்களே யொழிய, ஏனைய துறைகளில் ஒரே நிலைமைதான் நீடித்து வருகிறது.

எல்லாப் பரிசுகளிலும் மேலான பரிசு வெள்ளி விழாப் பரிசு. ஆனால் விளைவோ வேதனை தரக்கூடியது. திங்கள் தேர்வு, பருவத் தேர்வுகள் எல்லாவற்றிலும் வெற்றி பெற்ற மாணாக்கன் ஆண்டு நிறைவுத் தேர்வில் தோல்வி பெற்ற கதையைப்போல, புகைவண்டியில் ஏறிய சின்னஞ் சிறு வாண்டுப் பயல், வயது என்ன என்று யார் கேட்டாலும் எச்சமயத்தில் கேட்டாலும் இரண்டரை என்றே சொல்லிக் கொண்டு வந்தவன் பயணம் முடிந்து நிலையத்து வாசலில் நின்றவன் ஏனோ தானோ என்று கேட்க, நான்கு எனக் கூறி வக்கணையாய்க் கையையும் விரித்துக் காட்டி, தந்தையின் பையையும் விரியச் செய்துவிட்ட சம்பவம் போல, பள்ளிப் பரிசனைத்தையும் பெற்ற பூங்கோதை வெள்ளி விழாப் பரிசில் தோற்றாள். இதுவரை பெற்றவள் தோற்றாள் என்பது மட்டுமன்று; இதுவரை தோற்றவன் வென்றான். இங்கேதான் பூங்கோவையின் வாழ்வு இலக்கிய வாழ்வாக மாறும் பெருந்தகைமைக்குக் கொள்கலம் ஆகிறது.

இதுவரையிலும் தான் பரிசு பெற்ற போதெல்லாம் உபசாரத்துக்காகக்கூட ஒரு நன்றியுரை சொல்லவில்லை; அது மட்டுமா? பொறாமையின் வித்தும் மரமும் விளைவுந் தானே என விளங்கிய பூபாலன் இப்போது வெற்றி பெற்றுள்ளான். இதுவரை வெற்றி பெற்ற பூங்கோதை வெள்ளிவிழாப் பரிசில் தோற்றாள். ஆனால் பூபாலன் மேல் பொறாமைப்படவில்லை என்றாலே, பூபாலனை விட உயர்ந்தவளாய் விட்டாள். நேர் நின்று அவன் திறமையைப் பாராட்டும்போது, அவள் பூபாலனைவிடப் பன்மடங்கு உயர்ந்து விடுகிறாள்.

தாயுரை கொண்டு தாதை
    உதவிய தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச்
    சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை என்ற போழ்து
    புகழினோய்! தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ்
    ஆவரோ தெரியின் அம்மா

என்று காப்பியத் தலைவனாகிய இராமனையும்விட விஞ்சியவன் என்று கூறினானே கம்பன். அதுதானே வெற்றி!

பெண்மை அப்படி இருக்கிறது என்று சொல்லவில்லை; பெண்மை அப்படி இருக்கவேண்டும் என்று கனவு காண்கிறார் ஆசிரியர். வளர்ந்த உள்ளங்களாலேயே வரைந்து காட்ட முடியாத பண்பினை, அபலை என்ற சொல்லாற் குறிக்கப் பெறும் பெண்மையினத்துப் பூங்கோதை ஆரவாரமில்லாமல் நடைமுறைப் படுத்திக் காட்டிவிடுகிறாள். காப்பியத் தலைவி வெள்ளி விழாப் போட்டியில் தோற்கிறாள். பண்பில் வெற்றி பெற்று விடுகிறாள். வெள்ளி விழாப் போட்டியில் வெற்றி பெற்றவன் பண்பில் தோற்றுப் போகிறான். இறுதியில் வென்றவனே பாராட்டும் அளவுக்குப் பெண்மை வெற்றி பெற்று விடுகிறது.

பூங்கோதை பூபாலனின் வெற்றியைப் பாராட்டினாள் என நினைக்க வேண்டாம். வெற்றி உண்மையானதே. வெற்றிக்கு அடிப்படையான அவன் திறமையைப் பாராட்டலானாள். பூங்கோதையின் செயலால், வெற்றி பெற்றவன் பேச்சிழக்கிறான். தெளிந்த பூபாலன் திவ்வியப் பேச்சு இதோ:

"விற்றேன்நான் என்னறிவை
பண்பு கொண்டு
விடுவித்து எனக்கீந்தாய்
கோதை உன்னைப்
பெற்றோரைப் போற்றுகின்றேன்;
சாந்த ராத
பெருமையைநீ தந்ததனால்;"

இது அகப்பொருள் கூறும் களவுக் காலக் கலந்துரை பாடலன்று; உளவு பார்த்துப் பேசும் ஊடல் பேச்சன்று; அகத்துறையன்று. புறத்துறை. பண்பில் வென்றாள், பரிசில் தோற்றாள். இதுதான் பெண்மை என்பது ஆசிரியரின் உள்ளத் துடிப்பு. பள்ளிக்கூடத்தில் பொறாமைக் கரு வளரக் கூடாது. இத்தகைய கொள்கையாற்றல் பள்ளிக் காலத்திலேயே அமையவேண்டும். ஆம்! ஆசிரியரின் அனுபவம் விளைத்த பாடம். ஆசிரியரின் எண்ணம் காலச் சுழலில் நின்று வெற்றி பெறுவதாக.

இளங்கோவடிகள் காப்பியத்தில் கண்ணகி முதற்பகுதியில் பேசினாளில்லை. இறுதியில் மாமன்னனையே எதிர்த்து வழக்குரையாடுகிறாள். இங்கே துவக்கத்தில் கவிதை மழை பொழியும் பூங்கோதை மெல்ல மெல்லப் பேச்சிழக்கிறாள். இறுதியில் பேசாத பதுமையெனவே நின்று பேச்சிழக்குறாள்; இறக்கிறாள்! பேசி வெற்ற பெற்ற கண்ணகியைப் போலவே, பேசாமல், தன் உயிரை மெல்ல மெல்லத்

தியாகம் செய்து, கவிஞரெலாம் பேசவரிய பெருவெற்றி யைப் பெற்று விடுகிறாள் பூங்கோதை.

தவறு, நீதிமன்றம், மன்னிப்பு, தண்டனை இப்படிப் பல செயல்கள் அன்று முதல் இன்றுவரை நின்று நிலவி வருவன. சரியான தவற்றுக்குச் சரியான நீதிமன்றம் சரியான தண்டனையையே வழங்கியது என்று வைத்துக்கொள்வோம். தவற்றினால் இழந்த இழப்பை நீதி ஈடு செய்து விடுமா? கோவலன் கொல்லப்பட்டான். பாண்டியனே தவறுணர்ந்து வீழ்ந்து இறந்ததால் வளைந்த செங்கோல் நிமிரலாம். ஆனால் கோவலன் உயிர் போனது போனது தானே? கண்ணகி வாழ்க்கை பாழ்பட்டு விட்டது தானே! இவை இந்நாள் வரையில் விடையளிக்கப் பெறாத வெற்றுக் கேள்விகள்.

பூபாலன் கவியரங்கம் ஏறுகிறான். பூங்கோதையின் கற்பு அரங்கேற்றம் நிகழ்ந்து விடுகிறது!

தவறு நிகழ்கிறது தவற்றினை அதனோடு சம்பந்தப் பட்டவர்கள் எத்தகைய மனநிலையில் இருந்து செய்தார்கள் என்பதை அவரவர் மனநிலையில் நின்று சிந்தித்து எடை போட வேண்டுமே யல்லாமல், நம் மனநிலையில் அந்தத் தவற்றை எடை போடக் கூடாது. இதனை இந் நூலாசிரியர் தெளிவாக நமக்குக் கூறினார் என்பது மட்டு மன்று; வெற்றியும் பெற்றார் எனக் கூறவேண்டும். அதை உணர்த்தும் கவிதை வரிகளைத் தெள்ளத் தெளிய நாம் படிக்கத்தான் வேண்டும்.

வேம்பையன் தன் தந்தைக்கு மானக்கேட்டை உண் டாக்கிய அத்தை அன்னம்மாவின் செயலை நினைக்கிறான்; அன்னம்மாவையும் பூங்கோதையையும் அழிக்க எண்ணு தற்குமுன், நீள்மூச்சு விட்டழுத தந்தை காட்சி மாண்டு விடத் தூண்டியது வேம்பனைத்தான். மான்வழிலே

பயேன்னை? என்று வஞ்சம் ஏற்றான். மீண்டும் கூறுவான்- என்னிலையில் நின்று பாருங்கள். அப்போதுதான் என் னுள்ளம் உங்களுக்குத் தெரியும் என்று சொல்கிறான்.

ஏற்றுள்ள என்னுறுதி
தவறு என்போர்
ஏராளமா யிருக்கக்
கூடும்; ஆனால்
ஊற்றுக்கண் இல்லாத
கிணற்றைப் போல
ஊருலகம் எனைமதிக்க
எனதுள் ஆசை
காற்றுவெளி அற்றஇட
மாகி இன்பம்
காதறுந்த ஊசியெனப்
போச்சே! யாரே
சாற்றிடுவர் இந்நிலைக்கும்
இரக்கம்? வந்து
சாற்றிடுவீர் எனைத்தனக்கு
ஒப்பாய் கண்டே.

இவ்வாறு நடுநிலையில் நின்று சிந்தித்துத் தீர்ப்பு வழங்கவேண்டும் என்று மேற்கொண்ட பணியே இக் கவிதைக் காப்பியத்தின் இதயக் கமலமாக இயங்கி ஒளிவிடு வதைக் காணலாம். ஒரு கதையைக் கவிதை வடிவில் கொடுக்கவேண்டும் என்பது ஆசிரியர் நோக்கமன்று; இயல் பான சூழ்நிலையில், மெல்ல மெல்லத் தன் செயலாலே தன்னைக் காட்டிக் கொள்ளவைக்கும் சமுதாய அமைப்பில், வாழ்வியற் பாத்திரங்களாக அமைந்த மக்கள் எப்படி எப்படியெல்லாம் கொள்கைக் குன்றுகளாக விளங்க எண்ணு கிறார்கள், செயல்படுகிறார்கள் என்பதையும் எங்கிருந்தோ முளைத்த சில குறைகள் அவர்களைத் தோல்விப் பிண்டங் களாக மாற்றிவிடுகின்றன என்பதை இயற்கைப் படமாக

வரைந்து காட்டுவதே ஆசிரியரின் கொள்கைச் சிறப்பு.

கற்பிழந்த நங்கை பூங்கோதை அவள் வாழ்வதா? வீழ்வதா; இருவகைகளில் அவளை வாழச் செய்யலாம்.

கற்பழித்த வேம்பையனையே கடிமணம் புரிந்து வாழ்தல்; இதனால் கோளாறு ஏதும் இல்லை; ஆனால் கொள்கைச் சிக்கல்.

மனத்தைப் பூபாலன் எடுத்துக் கொண்டான்! உடலை வேம்பையன் சுவைத்து விட்டான்! இரண்டும் ஒருவனுக்கே அர்ப்பணிக்கப் பெறல்வேண்டும்.

வேம்பையன் மணந்தாலோ மனம் இல்லாத உடலைத் தான் அவன் மணக்கலாம். மணம் இல்லாத உடல்; உயிரில் லாத பிணம்; கற்பனையில்லாக் கவிதையைப் போலத்தான்.

பூபாலனை மணக்கலாம்! இதைத்தான் ஆசிரியர் அமைத்துக் காட்டுகிறார். மனத்தூய்மை இருந்தும் உடல் தூய்மை இல்லை. பூங்கோதையே ஒத்துக்கொண்டு கழுத்தை நீட்டினாலும் உயிர் பிரியவே செய்துவிட்டது!

வேறு ஓர் ஐயம்! கற்பிழந்த பூங்கோதை ஏன் செத்துப் போகவில்லை? பூபாலனுக்கும் ஒரு பாடங் கற்பிக்க இருந் தாள் போலும். திருமணம் வரையில் காத்திருந்தாள். ஆனால் வாழ்வில் மணங் கூட்டாமலேயே வாடிவிட்டாள்!

கவிஞர்கள், கதாசிரியர்கள், நாடகாசிரியர்கள் தாங்கள் கட்டிய காப்பியக் கட்டிடத்தில் உலவிவரும் தங்கள் பிள்ளைகளாகிய கதாபாத்திரங்களைச் சித்திரவதை செய்யத் தயங்க மாட்டார்கள்! காதலெனக் காட்டுவார் கள். ஐயகோ அனுபவிக்க விடமாட்டார்கள்! வன்னெஞ் சர்கள், ஆம்! கொலையே செய்துவிடுவார்கள்!

ஆனால் இக்கவிதைக் காப்பியத்தில் தான் பெற்ற மகளுக்குத் தரணியெல்லாம் பூரிக்கவொரு நல்வாழ்வை

அமைத்துக் கொடுத்த தந்தை போல, பூங்கோதையின் வாழ்வுக்கு-கற்பு பறிபோயினபின் வாழ முற்பட்ட வாழ்வுக்கு, வேண்டிய வளமான சூழ்நிலைகளை அமைத்துக் கொடுக்கிறார் ஆசிரியர்.

பூபாலன் வருகிறான்! பத்து லட்சத்துடன் வருகிறான்! வாழ்க்கையின் அடித்தளத்துக்கே போய்விட்ட, இனி வாழவே முடியாது என்று முடிவு கட்டிவிட்ட ஒருவரைக் கூட, உலகில் வாழவைக்கக் கூடிய பெருஞ் செல்வத்துடன் வருகிறான்! பூங்கோதையின் கற்பழிவு வெளிப்படையாகத் தெரிந்திருந்தாலுங்கூட, பூங்கோதையா? கற்பின் கொழுந்து, பொற்பின் செல்வி, வேம்பையன் பூங்கோதையைத் தொட்டானா? இல்லை! தொடச் சென்றான். ஒரே அக்கினிச் சுவாலை; சுடப்பட்டு வீழ்ந்தான் என்று பேசிக் கொண்டாட வைக்கக்கூடிய பெருஞ் செல்வ வளத்துடன் வருகிறான்! பூங்கோதைக்கு வேம்பையன் சதிசெய்யலாம். காலம் சதி செய்யவில்லை: சூழ்நிலை அவள் தலையில் அவள் குனியக் குனியக் கொட்டவில்லை! மாறாகச் சாதகமே செய்திருக்கிறது.

வேம்பையன் தான் செய்த கொடுமையை வெளியில் சொல்லாமலேயே இறந்துவிடுகிறான்! அன்னம்மாவும் பூபாலனும் பூங்கோதையின் முன்னிலையில் ஒளிவு மறைவு இன்றிப் பேசி முடிக்கிறார்கள். பூபாலன் எல்லாச் செய்தியையும் அறிந்த பிறகு இவளை மணப்பேன் என்றான்! இவன் பொதுத் தொண்டனாயிற்றே, கற்பிழந்த பூங்கோதையை மணக்கத் துணிந்தாலும் துணியலாம் என்று நினைத்து அன்னம்மா சொல்லவில்லை. மணம் நடந்தது! இவ்வளவு நல்ல சூழ்நிலையை வேறு கதைகளில் நாம்காண இயலாது. இருப்பினும் துன்பியலே முடிவு! ஏன் ?

ஆற்றங்கரையில் நாம் கண்டோம், அவ்லூர் மேட்டுக் குடிப் பெண்களை; ரமாவும் வள்ளியும் வாழவே செய்கின்றனர். கயமையின் மொத்த உருவமாக வருகிறான்

ரமா! அவள் தன்னை, தன் கற்பை, தன் உடலை மட்டுமா விற்றாள்? இல்லை! ஊரில் உள்ள பெண்களெல்லாம் அவளைப் போல விற்பனை செய்வதற்குத் துணை நின்றாள். வேம்பையனுக்கு விளக்கிக் கூறுகிறாளே தன் வரலாற்றை.

'ஊரில் ஆட்களின்றிப் போனதுபோல் தவிப்பு ஏன்? என்றாளே! இவள் வாழ்கிறாள். இவளை ஒத்தவர் வாழ் கின்றனர். இந்நூலாசிரியர் எத்தகைய சாதி பேதம் இருக்கக் கூடாது என்று கதறுகிறாரோ, அத்தகையதை அறவே ஒழித்தவள். தந்தையென்றும் மகனென்றும் பாரா மல், உயர்ந்தோனென்றும் தாழ்ந்தோனென்றும் பாராமல், செல்வனென்றோ ஏழையென்றோ பாராமல் யார் கை வைத்தாலும் வேறுபாடு இல்லாது ஒலி செய்யும் யாழ் போல, தன் கற்பை அனைவருக்கும் கொடுத்தவளாயிற்றே! உடலும் மனமும் ஒன்ற வாழ்வதே வாழ்வு என்ற கட்டுப் பாடோ களங்க உணர்வோ அவளிடம் இல்லை! கற்பைப் பற்றிய எண்ணமே இல்லை!

அவர்கள் மத்தியில் பூங்கோதை வாழ மறுக்கிறாள்! வீழ்கிறாள்! உலகத்தைத் திருத்தவா வீழ்ந்தாள்? இல்லை! எவ்வளவு சமாதானம் சொன்னாலும் அவள் உள்ளம் ஏற்க மறுக்கிறது. ரமாவைப் போன்றவர்களுக்கு எட்டாத வாழ்க்கை அது! கற்பும் கற்பைப் பற்றிய எண்ணமும் குடிப் பிறப்பிலிருந்து வரவேண்டும். அன்னம்மாகூட ஒத்துக்கொண்டு விட்டாளே! தாய்ப்பாசம்! ஊராருக்குத் தெரிவிக்காமலேயே வேம்பையன் செத்துவிட்டானே! இது ஒன்றுதான் அவளுக்கு ஆறுதல். பாவம் தாய்மை!

தாய்மை தூய்மையைப் புறக்கணித்து, இறுதியில் வென்றேவிட்டது. ஆனால், அவள் மகள் பூங்கோதை? விதிக்கு விதி வைத்தாள்! கவிஞரைக் கலங்க வைத்தாள்! பண்பெனும் மாளிகைக்குத் தியாகத்தைத் தூணாக நிறுத்தி விட்டாளே பாவை!

ம்ச்சுவீட்டு வாழ்க்கையையும் குச்சுவீட்டு வாழ்க்கை யையும் கண் முன் நிறுத்திக் காட்சிகளைப் புனையும் ஆசிரியர் பூங்கோதையை வாழவைக்க முடியவில்லையே! அவருடலில் ஓடும் தமிழ்க் குருதி இருவரையும் இணைத்து வாழவைக்கும் வரிகளை எழுத விடவில்லையே! இவ்வளவு முன்னேறிவிட்ட இருபதாம் நூற்றாண்டிலும் ஆசிரியர் கற்புக்கோர் அணிமுடியாகத் திகழும் அமுதைப் படைத்து அளிக்கத்தான் செய்துவிட்டார்.

கற்பு பெண்மைக்கு மட்டுந்தானா! ஆண்மைக்கும் உண்டு! ஆண்மை மேற்கொள்ளும் அப்பண்புக்குப் 'பேராண்மை' என்பது பெயர். கற்புக்கு அமைக்கப்பெறும் வட்டத்தை விடச் சற்றுப் பெரிய வட்டத்தில் விரிந்து விளங்குவது. பெருமை, உரன் என்ற இருபெரும் பண்பு களின் கூட்டமைப்பு அது.

வேம்பையனைப் பார்த்த நாம் பூபாலனையும் பார்க் கிறோம். செல்வம், மதிப்பு, சிக்கலற்ற வாழ்க்கை, பொதுத் தொண்டு, கொள்கைப் பிடிப்பு, இளைஞர்களுக்கு ஏற்றமுறச் சொல்லுந் திறன், பொதுத் தொண்டினால் வாழ முடியாதப்பா! என்று உள்ளொன்று வைத்துப் பேசினாலும் இளைத்துவிடாத அளவுக்கு அமைந்த அறிவுக் கவசம் இப்படிப் பலவகைப்பட்ட நல்லியல்புகளுங் கொண் டவன். சொல்லப்போனால் காதல் கவிதை எழுதுவானே யொழிய, பூங்கோதையைக்கூட அவன் காதலித்தான் என்று சொல்ல முடியாது.

'உன் மகள் பூங்கோதை பூபாலனின் காதலியோ?' என ஒரு வாண்டுப் பயல் வந்து அன்னம்மாவிடம் சொல்லிவிட்டு ஓடினானே, அதுவும் வேம்பையன் கட்டிவிட்ட கதை! அன்னம்மாவையும் அவள் மகள் பூங்கோதையையும் உற்ற வராய் எண்ணினான் பூபாலன்; சுற்றமென நாம் பழகும் உயர்ந்த நட்பு என்று சொன்னானே யொழியக் காதலை அங்கே காணோம்.

நிலைமையை உணர்ந்தபோது வாழ்வு தர எண்ணி னான், மணந்தான். பூங்கோதை வாழ்வியலை முடித்துக் கொண்டதும், துறவுக்கோலம் பூண்டு சமூகத் தொண்டில் ஈடுபட்டான். ஓராசை நீக்க எண்ணியவன் உள்ள ஆசைகள் அனைத்தையும் விட்டான். தொண்டினை-சமூக சமுதாய சீர்த்திருத்தத் தொண்டினைத் துறவிதான்-உண் மையான உள்ளத் துறவிதான் செய்ய முடியும் என்ற கொள்கை ஆசிரியர் காட்டும் முடிந்த முடிபு! பொதுத் தொண்டு என்பது பத்து லட்சம் சொத்துடையவனும், நச்சுப்பிச்சென்று ஆசைகளின் தாசனாக இல்லாத, பற்றற்ற முழுமைத் துறவுடையவனும் மேற்கொள்ள வேண்டிய செயலேயொழிய, பஞ்சையும் பராரியும் புகைப் பட விளம்பரக்காரனும் சென்று தொட்டால் அந்தத் தொண்டின் தூய்மை பாழ்பட்டுப் போகும்.

## இனி வேறொன்று

அன்னம்மாவும், பூங்கோதையும், பூபாலனும் நல்லவர் களே. உத்தமர்களே. சூழ்நிலைகள் சாதகமாகத்தானே அமைந்தன? வாழ்வியல் இன்பியலாக முடியாமல் துன்பிய லாக முடிவானேன்?

பரந்துபட்ட நாடகக்காப்பியங்களையெல்லாம் இணைத்து நோக்கி ஆராய்வோமானால் எல்லா நன்மைக் குணங்களுக்கும் கொள்கைகளுக்கும் இருப்பிடமாக இருக்கும் காப்பியத் தலைவனிடம் ஏதேனும் ஒரு சிறிய தீமைப்பண்பு குடி கொண்டிருக்கும். அதுவே மெல்ல வளர்ந்து, நன்மை களை யெல்லாம் அழித்து, துன்பியலை உண்டாக்கிவிடும். அல்லது நல்ல குணத்தைக்கூட, அளவுக்கும் அதிகமாகக் கொண்டாடும்போது மாறான பயனைத் தந்துவிடுகிறது. இரண்டாவது வகையில் சேர்ந்து விடுகிறாள் பூங்கோதை.

"உயிரினும் சிறந்தன்று
நாணே; நாணினும்

செயிர்தீர் காட்சிக்
கற்புச் சிறந்தன்று''

என்பது தொல்காப்பியம் காட்டும் தமிழர் நெறிமுறை.

உயிரை இழந்தேனும் நாணத்தைக் காப்பாற்ற வேண்டும்! உயிரையும் நாணத்தையும் இழந்தேனும் கற்பைக் காப்பாற்ற வேண்டும்! ஆனால் பூங்கோதை, உயிரினும் சிறந்தன்று நாணே! நாணினும்...மேலே போக மாட்டேன் என்கிறாள்.

பள்ளியில் படிக்குங் காலத்தில் குணங்கண்டு பாராட்டுவதற்கு நாணம் தடை செய்யவில்லை. தன் வீட்டுக்குப் பூபாலன் வந்தபோது நாற்காலியை இழுத்துப் போட்டு உட்காரச் சொல்கிறாள்;

''இந்தப்பாதை அடியோடு
மறந்திருக்கும் போலும்
வண்டாகப் பறக்கின்றீர்
கவிதை பாட
வகையறியார்என் செய்வோம்''

என்று கிண்டலாகப் பேசுகிறாள். பூபாலன் வந்தபோது, அன்னம்மாவுடன் சமையலுக்கு ஒத்தாசையாக உள்ளே செல்லாமல் பூபாலனோடு தனித்திருந்தே பேசிக்கொண்டிருக்கிறாள்.

நாணம் எது? நாணத்தின் இலக்கணத்தை உண்மையாக மதிப்பிட்டுக் காட்டும் ஆசிரியர் நுண்மாண் நுழைபுலத்திறனைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

தன் உள்ளத்தில் பூபாலனைப் பற்றிய விருப்புணர்வு இருக்கிறது என்பதை வாய்ப்பு வந்தபோதுகூட வார்த்தையிற் சொல்லவில்லையே!

குளக்கரையில் பெண்கள் பேசுகிறார்கள். பின்னர் வேம்பையனிடம் ரமா பேசுகின்றாளே. இங்கெல்லாம் நாணம் நாணுவதைக் காண்கிறோம். குணங்களின் கொள் கலமாக இருந்த பூங்கோதையிடம் எல்லையின்றிக் குவிந் திருந்த நாணமே வில்லனாக நின்று துன்பியலுக்குத் துணை செய்துவிடுகிறது. அது மட்டுமா?

ஆசிரியர் அருமையாக அமைத்துக் காட்டும் துலாக் கோல் ஒன்று உண்டு!

கிளிமூக்குக் குவளையில் அன்னம்மா மோர் கொண்டு வருவது அவனுக்குத்தான். காலங் கடத்துகிறான்.

"கொண்டுவந்து எதிர்வைத்த மோரைக்கூடக் குடிக் காமல் ஏன் பாலு?" என்று அன்னம்மா கேட்கிறாள். அப்புறம்தான் மோரையே பார்க்கிறான். எடுத்துக் குடிக்கப் போகிறான். "மோர் இந்நேரம் கய்த்திருக்கும்!" எனக் கூறித் தடுத்தாள் பூங்கோதை.

நான் கொடுத்து விட்டேன்; "பருகாதது உன் தவறு" என்றாள் அன்னம். "ஈயமில்லாக் குவளை, பருகிவிடு" என்று சொல்லிக் கொடுக்காதது உங்கள் குறை என்றான் பூபாலன். இருவர் பங்கிலும் தவறுண்டு என்பது பூபாலன் வாயிலாக ஆசிரியர் வழங்கும் தீர்ப்பு.

எதிரிலிருப்பவள்; நாற்காலியை இழுத்துப் போட்டு உட்காரச் சொன்னவள்; சமையலுக்குத் துணை போகாது பக்கத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்தாலே போதும் அதுவே இன்பம் என எண்ணிக் கொண்டிருப்பவள்; "மோர் இந்நேரம் கய்த்திருக்கும்" என்று சொல்லத் தெரிந்தவள்; 'மோரைச் சாப்பிடுங்கள்' என்று ஒரு வார்த்தை சொல்லியிருக்கக் கூடாதா? தன் பங்கிலும் அன்னம்மாள் பங்கிலும் குற்றத்தை நிறுத்தித் தீர்ப்புச் சொல்லும் பூபாலன் பூங்கோதையை இணைக்கவே யில்லையே!

காலங் கடத்துகிறான். கடத்திவிட்டான் என்று எண்ணுகிறாள் பூங்கோதை; ஒரு வார்த்தை சொல்லியிருக்கலாம் என்பது பூபாலன் நினைப்பு.

''மாட்டாளே தன் நெஞ்சில்
நிறைந்து உள்ள
மாளாத காதலினை''

என்று இதனை ஆசிரியர் முன்னமேயே சுட்டிக் காட்டுகிறார்.

சிறப்பான சூழ்நிலை அமைந்தபோதும் பூங்கோதை நாணம் தடுக்கவே பேசாது விட்டு விடுகிறாள். பூங்கோதை வீசியெறிந்த மாலையை, அவனே எடுத்துக்காட்டி, ஏது இது என்று கேட்டான். எல்லாவற்றையும் சொல்லிவிட வாயெடுத்தாள்.

''வாய்க்குள் திக்கிய நாப் பேசாமல் உதிர்த்தாள் கண்ணீர்'' நாணம் என்ற நற்பண்பு செய்த கொடுமை!

ஆசிரியர் இங்கே சிந்திக்க வைக்கும் நயம் ஒன்று உண்டு. கிளிமூக்குக் குவளைதான் அன்னம். அது தாங்கியிருக்கும் மோர்தான் பூங்கோதை. ஆனால் பூபாலன் உணர்ந்து வருகின்றவரையில், உரிய காலம் வரும்வரையில் காப்பாற்றி வைத்திருந்து கொடுக்கக்கூடிய காவல் அன்னம்மாளிடம் இல்லை. அய்யாக்கண் இருந்திருந்தால் அவன் தான் அவள் கணவன்—அவள் ஈயம் குறையாத குவளை. அதை உணரவில்லை மூவருமே!

நாணம் பூங்கோதையின் பங்கில் நிற்க; சொல்லாமல் தெரிந்து கொள்ள இயலாத நிலையில் காலந் தாழ்த்தல் பூபாலன் பங்கில் நிற்க, 'காவல் இல்லாமை' என்ற நிலை அன்னம்மாள் பங்கில் நிற்க, இந்தத் துன்பியல் நடந்தே விடுகிறது.

இனி, வேறோர் ஐயம். கற்பிழந்த பின்னரும் பூங்கோதையின் உயிர் நிற்கிறதே? ஆம்! பூங்கோதையின்

தற்கொலையை அன்னம்மாள்கூட நினைக்கத்தான் செய்கிறாள். எதிர்பாராதது நடந்துவிட்டது; ஆனால் எவரும் எதிர்பார்ப்பது நடைபெறவில்லை.

அவள் உயிர் நிற்கிறது. ஆம்! வாழ்வதற்கா? இல்லை! பூபாலனை உள்ளத்தில் வரித்தாளே! அந்த எண்ணம் சாகவில்லை. பூபாலன் மணக்கிறேன் என்றதும் புதுத்தெம்பு உண்டாகிறது. அப்போதும் ஒரு வார்த்தை பேசவில்லை! இறுதிவரை பேசவில்லை!

கூரிய வாளின்மேல் சுமைப்பானையைத் தலையில் வைத்துக் கொண்டு நடப்பது போல் நாணத்தின் நாடகத்தை மெல்ல நடத்திச் செல்கிறார். பூபாலனோடு இணைதல் என்ற உள்ளத்தெண்ணம் சாகடிக்கப் பெறும் வரை உயிர் நிற்கிறது.

கற்பு அவளை முதலாக நின்று கொன்றது. பூபாலனோடு இணைதல் என்ற எண்ணம் அதைத் தாங்கி நின்ற துணை எண்ணம்—

"காண்பதற்குச் சுவையான
காட்சி பெற்றோர்
கண்குளிரும் மணக்கோலக்
காட்சி ஒன்றே"

என்ற அன்னம்மாளின் எண்ணம் நிறையட்டுமே அந்த அபலையுந்தான் கொஞ்சநாள் மகிழ்ச்சியாகத் திரியட்டுமே என்ற அற்ப எண்ணம்.

மணம் முடித்து, அறையில் சென்று, மாலையை நீக்கி இருவுருவமும் தோளோடு தோள் இணைந்த அக்கணத்தே அவளுயிரைத் தாங்கி வந்த எண்ணங்கள் செத்தன!

மூன்றாவதாக, நாணமே கயிறாக நாண்மலர்ப் பூங்கோதை தன்னை நிறைவு செய்து கொள்கிறாள்.

தொல்காப்பியப் பெண் நாணம் அழியவும் நிற்பாள். கற்பைக் காப்பது கருதி, நான் இன்னாரை உளங்கொண்டு

விட்டேன் என்று நாணம் இழந்த நிலையில் கூறவும் செய்வாள்! ஆனால் கலைக்கூத்தனாரின் கவிதைக் காப்பியம் நாணம் இழந்த பெண்மையை நிலைநாட்ட—காப்பியத் தலைவியாக நிறுத்த விரும்பவில்லை.

பூபாலனையன்றி வேம்பையனை மணக்கும் நிலைமை ஏற்பட்டிருந்தால் ஒருவேளை, நாணத்தைக் கடந்து பூங்கோதை பேசியிருப்பாள் எனக் கொள்ளலாமா? தொல்காப்பிய இலக்கணம் அதை ஏற்கிறதே! அங்கேயும் அவள் நாணத்தை இழந்து பேசமாட்டாள். செத்துத்தான் இருப்பாள். நாணம் அழியப் பேசுவாள் என்ற பேச்சுக்கே அப்பாத்திரத்தில் இடம் இல்லை.

'மோரைக் குடியுங்கள்' என்று சொல்லிவிட்டால் என்னைப் பருகுங்கள் என்ற உள்ளர்த்தம் தொனித்துவிடப் போகிறதே என்றுதானே அவள் பேசாதிருந்தாள்?

நாண் என்ற தனிக் குணத்தின் தன்னேரில்லாத் தலைமகளாக நிற்கும் பெண் இல்லறத்தில் எத்துணையளவுக்கு மதிப்பைக் கொடுப்பாள் என்று நினைக்க முடியாது; எழுத முடியாது!

'நாண்' என்பதன் உயிர்நாடியை நாடகக் குறிக்கோளாக வைத்து, பூங்கோதை என்ற பாத்திரத்தை உருவாக்கி நிறுத்துகிறார், ஆசிரியர் கலைக்கூத்தனார். 'நாண்' என்ற தனியறத்தின் தலைநாயகியாக நின்றவள் ஒருமுறை அணைத்தால், அவளைத் தவிர வேறு எதையும் பாராத பேராண்மை பெற்றுவிடுவான். அவள் இல்லையானால் அவன் பேராண்மையின் துறவியாக நிற்பான். ஈனி என்று பெயரெடுக்கும் நிலையில் எந்த ஆசைக்கும் அடிபணிய மாட்டான். பெண்மையின் நாணக் குறைவுதான் ஆண்மைக்குப் பிறபொருளை இச்சிக்கும் இழிநிலையை உண்டாக்கி விடுகிறது என்பது இல்லறத்தின் உயிர்நாடி.

இது கலைக்கூத்தனார் காட்டிய புதுமை. தொல்காப்பியக் கொள்கையைவிட ஒல்காப் பெருமைதரும் புரட்சிப் புதுமை!

## பூபாலன்

பூபாலன் என்ற பெயரை ஆசிரியர் ஏன் மேற்கொண்டார்? பூங்கோதை என்ற பெயரோடு எழுத்துப் பொருத்தம் வரவேண்டும் என்பதே. அன்னம்மாள் கணவன் அய்யாக்கண்ணு என்பதையும் நோக்கலாமே!

பூபாலனிடம் காணப்பெறும் உயர்ந்த பண்பு எது? பிறரைத் தராசிலிட்டு நிறுத்துப் புரிந்து கொள்வது. தொடக்க முதல் இறுதி வரை இப்பண்பிலேயே இவனை அணு அணுவாக முன்னேற்றி வரும் ஆசிரியர், அதே பண்பினால் அவன் வாழ்க்கையை இல்லறத்திலிருந்து துறவறத்துக்கு மாற்றி விடுகிறார்.

'நாணம்' என்ற தனிக்குணத்தின் தவநாயகியாகப் பூங்கோதையை நிறுத்திக் காட்டியது போல, 'அறிவு' என்னும் தனிக்குணத்தின் தலைமகனாகப் பூபாலனை நிறுத்துகிறார் ஆசிரியர்.

அறிவுக்குப் பலவகை இலக்கணங்கள்; விளக்கங்கள். 'அறிவுடைமை' என்ற அதிகாரத்தை வரையறைப் படுத்திக் கூறிய திருவள்ளுவரே 'மெய்யுணர்தல்' என்ற அதிகாரத்தையும் எடுத்து மொழிவதைக் காணலாம்.

பூபாலனை முழுமையாக உணர்ந்து கொள்வதற்கு ஒரு குறள்.

> ''சென்ற இடத்தாற் செலவிடா தீது ஒரீஇ
> நன்றின்பால் உய்ப்பது அறிவு''

நன்மை, தீமைகளைப் புரிந்துகொள்வதே அறிவுதான். ஆனால் அதுவே அறிவாகி விடாது. ஒருவனைத் தீமையில் இணையாதவாறு தடுத்து, நன்மையை உணர்த்தி, அதில் செயலாற்றுமாறு செய்வதுதான் அறிவு.

நன்மைச் செயலைச் செய்து வாழாதவன் அறிவுடையானாக மாட்டான்.

தீமைகளை இனங்கண்டு நீக்கி, நன்மைகளை இனம் சுட்டிக் காட்டிச் செயற்படுத்துவதே பூபாலன் மேற் கொண்ட சமுதாயத் தொண்டு.

"நம்பிக்கை மிகத் தேவை; ஆனால், ஞானம்
நசுக்கி விடும் நம்பிக்கை நஞ்சுக்கு ஒப்பாம்"

என்று கூறும் பூபாலன் கூற்று, காப்பியத்துக்கு அணிசெய் யும் ஏற்றமிகு நன்மொழி என்பது மட்டுமன்று; இவ்வுலகம் இன்றல்ல, நாளையல்ல, என்றுமே போற்றிப் பொதிந்து கொள்ள வேண்டிய பொன்மொழியாகும்.

தெய்வ நம்பிக்கை இருக்கட்டும். ஆனால் தெய்வத் துக்கு விடப்பட்ட காளையையுமா தெய்வமென நம்ப வேண்டும்! தெய்வக் காளை தீங்கு செய்தால், அதைத் தண்டித்தால், தெய்வம் நம்மைத் தண்டிக்கும் என்ற மூடநம்பிக்கையை எந்த அறிஞருலகந்தான் ஏற்கும்!

ஆசிரியர் சுவைபடக் குறிப்பிடுவது போல, மன்னிப்பு என்பதற்கே இடங்கொடாமல் வாழ்ந்துவரும் கூட்டமொன் றுண்டு. அது செய்யும் மத்தாப்பு வேலைகளில் மயங்கி நிற்கும் மக்களுக்கு—ஆம், வேறே என்ன பெயரால் அவர் களைக் குறிப்பிடுவது!—உண்மையிது, பொய்யிது, என இனம் பிரித்துக் காட்டும் நற்பணி நாயகனாக நின்று சிறக் கிறான் பூபாலன்.

"............ பெண் கற்பு உடலின் மீது
மறுப்போல ஒட்டிக் கொண் டிருக்கும் என்று
திணைத்துணையும் நினைப்பவனை முட்டாள்
என்பேன்
தெளிகற்பு உளத்திலன்றி உடலி லல்ல"

என்று இப்படிப்பட்ட பேச்சுக்கள் அவனை நாம் உணரத் துணை செய்வன.

தத்துவ ஞானிகள் பலர் பணத்தைக் கையால் தொடு வதற்குக் கூடப் பயந்திருக்கிறார்கள். பூபாலன் தனக்குப் பரிசாக வந்த பத்து லட்ச ரூபாயைப் பார்க்கிறான்.

பணமே! உன்னிடத்தில் கொடுமை இல்லை. நிலத்துக் கேற்ப நிறம் மாறும் தண்ணீரைப் போன்றவள் நீ.

**"முன்னே உன் செயல் வேறு; பாலன் கைக்குள்**
**முடங்கிய பின் உன் தன்மை முற்றும் வேறு"**

என்று குறிப்பிட்டுக் காட்டுகிறான். இப்படி எண்ணற்ற இடங்கள்.

## அன்னம்மா

ஆம். ஒரு சிறந்த பாத்திரப் படைப்பு. சமுதாயச் சீர்திருத்தத்துக்கெனத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட வரலாற்று முத்திரை அமைந்த வான்மைக் காப்பியம்.

பாலும் நீரும்; தூய்மையும் தூய்மையின்மையும்; உயர்வும் தாழ்வும்; வாழ்மையும் ஏழ்மையும்; வளமையும் இன்மையும்; உழைப்பும் உழைப்பின்மையால் விளைந்த தழைப்பும் என்றிப்படியெல்லாம் இணைந்து நிற்கும் இச் சமுதாயத்தில், நீரிலிருந்து பாலைப் பிரித்து, உயர்ந்ததை மட்டுமே எடுத்துக் கொள்ளும் அன்னத்தைப் போன்ற வளல்ல அன்னம்மா.

கொள்கையில் உயர்வைக் கொண்டவள். குடியிருக்கக் குச்சு வீட்டையும், மடியில்லா உழைப்பையும், விடியா முன் விடிந்துவிட்ட வாழ்வின் தத்துவங்களையும் மன முவந்து ஏற்றவள்.

பூங்கோதை என்ற பண்புகளின் தொகுப்பை, பூத்து வெளியிடக் கூடிய திட்ப நுட்பஞ் செறிந்த தாயகமாக நின்றவள்.

'உன்னைப் பெற்றோரைப் போற்றுகின்றேன்' என்று பூபாலன் போற்றும் புகழுரை இவள் தவம் தந்த பரிசு.

செல்வக் குடும்பத்திற் பிறந்து சீர்திருத்தம் பேசுவது என்றாலே விந்தையானதுதான். கேட்பவர்களும் வக்கணை யாக இருந்தால் சொல்லத் தெரிந்தவர்கள் சும்மா சொல்ல மாட்டார்கள்; தெய்வத்தின் திருவுரு என்றே சொல்லி

விடுவார்கள். அன்னம்மா சீர்திருத்தம் பேசியவள் மட்டுமல்லள். செயற்படுத்தி வாழ்ந்து காட்ட வெளியில் வந்தவள்.

கணவனை இழந்தாலும் கண்ணியம் இழாதவள்; அக்காலமென்ன இக்காலத்திலும் கைம்பெண் என்றால் ஆப்பம் சுட்டுத்தான் அகட்டைக் கழுவ வேண்டும் என்றால் அதையும் கடமையெனச் செய்து மடமையை வென்றவள். பெண்மையே கல்வியின் தனியரசி என்றால் பெண்களுக்கேன் அதிலிருந்து விலக்கு என எண்ணித் தன் குலவிளக்காம் பூங்கோதைக்குக் கல்விக் கலைவிளக்களித்த காரிகை. தந்தையாயினும் தன் உடன் பிறந்தானாயினும் கல்லறையைக் காட்டி இது உனக்கு நாங்கள் தந்த வாழ்வு என்றபோது சொல்லறை கூவிச் சுருக்கென வந்தவள். கட்டுப்படாதவள் என்பது அவள் பெற்ற பட்டம். கட்டுப்பட்ட வாழ்வு என்பது அவள் தேகங் காட்டும் வரலாற்றுச் சட்டம்.

''வேகத்தை ஊட்டியவர் சமுதா யத்தில்
வீண் பேதம் மாற்றியவர் நீங்கள்''

என்பன பொதுத் தொண்டன் பூபாலனின் பொன்னெழுத்துக்கள்.

''நாளெல்லாம் சுகபோக வாழ்க்கை வாழல்
நலமென்று அவளாசை கொள்ள வில்லை
ஊழென்றா லும்அதையான் வெல்வேன் என்ற
உறுதியைத்தன் லட்சியமாகக் கொண்டவளே''

அன்னம்மா. முதுமையிலும் இளமையுள்ளங் கொண்டு, மறப்புலியெனப் பாய்ந்து, காமவிகாரத்தைக் கடித்துக் குதறித் துப்பிய காரிகை. பெண்மை சினந்தால் படையெதற்கு வாளெதற்கு!

தன்னையும் மிஞ்சி விடுவாள் தன் மகள் பூங்கோதை என்று அறிந்துகொள்ள முடியாததுதான் தாய் மனம் போலும்.

தூய்மையிழந்தவளையும் தூய்மையிழவாத பொதுத் தொண்டனுக்குத் துணையென நிறுத்த உடன்பட்டு விட்டாளே!

விடியாமுன் விடிந்துவிட்டதே இந்த அபலையின் வாழ்வு என்ற இரக்கமா? உண்மையைத்தான் ஊரார் அறியவில்லையே என்ற அரக்க உணர்வா? நடந்ததைத் தான் நடந்தவாறு சொல்லிவிட்டோமே, தெரிந்தும் இணைக்கரம் நீட்டியபோது யானேன் நிற்பேன் தடையாக என்று கூறும் வறட்டுக் காரண விரைப்பா? அல்லது இம் மூன்றுமா? இல்லை; இல்லை.

''கருங்காலிக் கட்டைக்கு வாய் நாணாக் கோடாலி கதலி இளவாழைத் தண்டுக்கு வாய் நாணும்'' ஆம். தாய் மையின் தாக்கு.

## வேம்பையன்

சும்மா சொல்லக் கூடாது. நாலுந் தெரிந்தவன்.

எழுதப்படிக்கத் தெரிந்தவன். இளம் பெண்களை வளமாக்கிச் சுவைக்கத் தெரிந்தவன்.

எரியும் அகல்விளக்கை அணைத்து, என்னை மறக்க மாட்டேன் என்று சத்தியஞ் செய் என்று ரமா கேட்கிறாள். எவ்வளவோ அறிஞர்கள் இந்த விதியில் வீழ்ந்துதான் விட்டார்கள். சத்தியம் செய்து தருவதற்கு ஒவ்வாத தனியாண்மைத் தனிவீரன். வெளியில் பட்டி மன்றம். இலக்கிய விளக்கம் பேசுவார்கள். ஒரு பெண் தனிமையில் நின்று கேட்கும்போது, தடுத்துச் சென்ற ஆண் மக்கள் இரார். ஒருவேளை எரியும் விளக்கை அணைத்தால் இருட்டு வரும். இருட்டில் சத்தியம் செய்வது அழகும் அறமும் அறிவுடைமையும் அல்ல எனக் கருதியிருப்பான் போலும். அப்படியிருந்தாலும் அவன் தெரிந்தவன்தானே!

'ஏற்றம்' என்ற இதழில் பூபாலன் எழுதிய காதல் கவிதையைப் படிக்கக் கேட்டான். படித்தவனோ பாட்டின்

கருவைக் கேட்டான். பட்டென்று சொன்னானே! அவன் நாலுந் தெரிந்தவனே!

அறிஞர்களை உடன் வைத்துக் கொண்டே தனக்கு வேண்டியவைகளை ஆக்கிக் கொள்ளும் சாமர்த்தியம் இல்லாதவர்களை எண்ணும்போது வாண்டுகளை வைத்துக் கொண்டே சமர்த்தாக முடித்து விட்டானே!

இக் காப்பியத்தின் துன்பியலுக்குத் தலைமை தாங்கும் இவன் என்னிலையில் உங்களைக் ஆக்கிக்கொண்டு, என் செயலைச் சிந்தியுங்கள். அப்போதுதான் என் செயலும் சரி என்று உங்களுக்குத் தெரியும் என்று சிந்தனையாளர் களுக்கே சிந்திக்கும் வழியைச் சொல்லித் தருகிறானே!

பாவம் பெண்மையை விரும்பி, பெண்மையையே சுவைத்து; பெண்மையையே நடுத்தெருவில் நிற்குமாறு செய்து பெண்மையை எதிர்த்து, மெண்மையால் கடிபட்டு, பெண்மைக்குப் பலியான பெருந்தலைவனே வேம்பையன்.

## சில பொதுச் சிந்தனைகள்...

வாழ்க்கை என்றால் என்ன? நிகழ்ச்சிகளின் இணைப் புத்தானே! சுவையான திருப்பங்கள் அமைந்தால்தான் வாழ்க்கை. சுவையான வாழ்க்கையென்றால் மேடு பள்ளங்கள், எதிர்பாராத திருப்பங்கள், ஆழ்கடலுக்கடியில் முத்தெடுக்கும் அவசியமும் வரவேண்டும்; இமயமலையின் மேலேறிக் கொடி நாட்டியாகவேண்டிய கட்டாயமும் வரவேண்டும். இவைகளை அடுக்கடுக்காகச் சந்தித்தால் தான் வாழ்க்கை. மற்றவைகள் நாளைக் கொல்லும் கசாப்புக் கடை வேலை.

பூபாலன் சென்னைக்குச் சென்றான்; திரும்பி வந்தான் நிகழ்ச்சிகள்.

"ஒன்றோடு பலவாக
சேரித்துக் கொண்டு

ஓடுரயில் ஓரத்துக்
கம்பி பற்றி
மன்றாடின் இடமில்லை
வெளவால் போல
மக்களொடு தொங்கியன்றோ
சென்னை வந்தான்''.

*சென்னையிலிருந்து திரும்புகிறான். பரிசுச் சீட்டுத் தந்த பத்து லட்சம் பணம். அது மட்டுமா!*

''புறப்பட்ட மின்பாய்ச்சல்
வண்டி ஆங்கே
புல்லரிக்க ஒலியெழுப்பி
ஓட நன்கு
தரப்பட்ட முதல் வகுப்பில்
தனித்த மர்ந்தே
தகதகக்கும் ஒளிக்கதிரை
அடக்கி நீலம்
பெறப்பட்ட கவர்ச்சி விளக்
கேற்றி மெத்தை
போட்டிருந்த வசதியையும்
பார்த்துக் காற்று
வரப்பட்ட வழியுணர்ந்தே
தலைய ணைக்கு
வாகாகப் படுத்து''

*வருகின்றானே! எத்துணையளவு ஏற்ற இறக்கங்கள்.*

*தனிக் கவிதை காப்பியமாகும்போது திருப்பங்கள் அமைத்துக் கவர்ச்சியூட்ட வேண்டும். அதற்குக் கவிதை யாக்கும் திறமையிருந்தால் மட்டும் போதாது. படிப்பவர் களின் உள்ளத்துக்குச் சுவையாக எடுத்துக் கொடுக்கத் தெரியவேண்டும். இந்த இரண்டுந் தெரிந்தால் மட்டுமே போதாது. கொள்கையிலிருந்து நழுவுவதோ, மரபிலிருந்து வழுவுபடுவதோ இல்லாமல் குறிக்கோளை நோக்கி முழுமை யாகச் சிந்தித்து ஒன்றிவிடும் உயரறமும் தேவை.*

இம் மூன்றையும் மூவகை இழுப்பாற்றலாக அமைத்து இக்காப்பியம் என்னும் பூகோளத்தை உருட்டி விட்டிருக்கிறார் ஆசிரியர்.

தனிமலர் கோதையாக வேண்டுமானால் தொடுக்கும் கலைத்திறன் அமைய வேண்டும். பூங்கோதையை அந்தாதியில் தொடுக்கும் ஆசிரியர் சில திருப்பங்களையும் அந்தாதியாகத் தொடுக்கிறார். அது ஆசிரியரின் தனித்திறமை.

(1) வாண்டுப் பயல் இருமுறை வருகிறான். முதல் முறையில் ஒரு திருப்பம். ',பூபாலன் என்பான் உன்றன் வண்ணமகள் காதலனோ அம்மா?'' பொய்யான இக்கதையைப் புனைந்துவிட்டு அனுப்பினவனே வேம்பையன்தான். பின்னர் அவனே அதை உண்மையெனக் காணுகிறான்.

(2) 'ஏற்றம்' என்ற இதழுக்கு ஒரு காதல் பாட்டு. இதழின் பெயர் ஏற்றம்; கவிதையோ காதலைப்பற்றி. அஞ்சலகத்திற் சேர்க்கப் போகும்போது அவன் காலடியில் வந்து விழ்கிறது மாலை—பூங்கோதை தொடுத்த மாலை.

(3) வாண்டுப் பயலின் இரண்டாம் முறை வருகை. கையில் மடல் தருகிறான். முன்னே பூபாலனைப் பற்றிச் சொன்னவன், இப்போதும் அவன் தந்த மடலாக இருக்கும் என நினைக்கிறாள். ஆனால் அது வேம்பையன் தந்த மடல்.

(4) ''மறப்போம், நாம் மன்னிப்போம்'' என்று பேசுகிறாள் அன்னம். வேம்பையன் தந்த முடங்கலை—அதன் விளைவைப் பற்றி அன்னம் பேசுகிறாள்.

''மறப்போம், நாம் மன்னிப்போம்'' என்பவை காஞ்சி மாமேதை கூற்றம்மா என்று சொல்லிக்கொண்டே பூபாலன் வருகிறான்.

(5) 'ஏற்றம்' என்ற இதழில் பூபாலன் எழுதிய காதல் கவிதை வருகிறது. அன்றுதான் வேம்பையன் சிரித்தான்.

பூபாலன் கவியரங்கில் சிரிப்பை அரங்கேற்றினான். காரி கையும் அரங்கேறினாள்.

(6) கனவில் வந்த ஊர்க்காளை. கோயிற் பொலி காளை. நம்பிக்கை தேவை. ஆனால் மூடநம்பிக்கை தேவையில்லை. கோயில்காளை பசுக்கன்றை முட்ட, பசுவானது பாய்ந்து அந்தக் காளையைக் குத்திக் கொன்று விடுகிறது. இக்கனவு விழிப்புத்தான் தஞ்சை என்ற புகைவண்டி நிலையம்.

(7) திருமணக் கோலத்தைக் காணும் அன்னம்மாவின் மனப்போராட்டம். தாலியை நாமும் பெற்றோம்; இழந்தோம்; மணஒலிக்குப் பின்னே சாப்பறை- இரண்டையும் இணைக்கிறது அந்த அபலை உள்ளம்.

''கேட்டவொலி கேட்காமல் இருக்க வேண்டுமே'' என்பதுதான் அவள் எண்ணம்.

இரண்டையும் இணைக்கிறார் ஆசிரியர். உறவு நாளும் துறவு நாளும்; மணக்கோலத்தோடு சாய்ந்த பிணக் கோலம்.

கல்லறையே சமூகத் தொண்டு பேணும் நல்லாசிரமம். இப்படி முடிக்கிறார்.

## கவிதை ஏன்?

ஒலிக்குப் பொருள் இல்லை. பொருளோடு இணைந்த ஒலி மொழியாகிறது. மொழியை உரைநடையிலும் காணலாம்; கவியிலும் காணலாம். இரண்டிற்கும் இலக்கணக் கட்டுக்கோப்பு உண்டு. அறிவாற்றலின் அடிப்படையில் எழுவது உரைநடை. கவியிலும் அறிவாற்றலுக்கே முக்கிய இடம் உண்டு. பொருளாழம் மிக்கதாய் வல்லோர் அணி பெறச் செய்வதை செய்யுள் என்பது இலக்கணம்.

கவிதையானது மேற்சொன்னவைகளோடு ஒத்ததே யாயினும் பரந்துபட்ட அளவில் வேறுபாடு கொண்டு மிளிர்

கிறது. கேட்டவனுடைய உள்ளத்து உணர்ச்சிகளை ஒருமுகப் படுத்திச் செயற்படுத்தும் ஆற்றல் கவிதைக்கு ஒரு முக்கிய இலக்கணம்.

செவ்விய, கூரிய, சீரிய, தீஞ்சொற்களைப் பொறுக்கி எடுத்து, வைரமணியில் பட்டை தீட்டுதல் போல் பல வாறாகப் பட்டை திட்டிப் பதிக்கும் வேலையைச் சிறப்புறச் செய்து மிளிரவைக்க வேண்டும் கவிதை. ஆனால் கவிதைக்குச் சிறப்பியல்பு அதனைக் கேட்டவனைச் செயற்படுத்த வேண்டும். மணிக்கணக்காகத் திட்ட நுட்பஞ் செறிய விரிவுரையாற்ற வேண்டிய நற்சொற்கள் மிக்கிருக்க வேண்டும் கவிக்கு. ''சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரியினை வீரர் கண்டார்'' என்று பாடுவான் கம்பன்.

கவிதையோ உள்ளத்துணர்ச்சிகளை ஒருசேரத்தாக்கும் வன்மையுடையதாகவும், உணர்ச்சிகளை ஒருமுகப்படுத்திச் செயலாற்றக்கூடிய செயல் வலிமையை உடையதாகவும் அமைய வேண்டும். அத்தகைய நிலையில் அமையக்கூடிய சொல்லமைப்பும் ஓசைநயமும் உடையதாகக் கவிதை அமைய வேண்டும். கருத்தாழம் மிக்க சொற்கள். அவை நுட்பமாக விளைவிக்கும் பொருளாழம் இவையெல்லாம் கவிதை நடைக்கு அத்துணை வலிவை தருவன அல்ல. எனவே கவி வேறு; கவிதை வேறு.

வரலாற்றுக் கண்கொண்டு நோக்கினால் கவிதை வளருமளவுக்குக் கவிகள் வளர்ந்தன என்று சொல்ல முடியாது. கவி வேறு; கவிதை வேறு என்ற கருத்தையே ஒத்துக் கொள்பவர்கள் அரிது. எளிமை என்ற ஒன்றை மட்டுமே கொண்டு கவிதைகளைத் தனிப்பிரிப்பாரும் உளர். ஏட்டுக்கு வாராத நாட்டு இலக்கியங்கள் எனப்பெறும் மக்கள் கவிதைகளை இலக்கியம் இல்லை என்று யாரும் சொல்ல முடியாது. கவிகளுக்கும் அவைகளுக்கும் உள்ள வேற்றுமையை நன்கு பிரிவு படுத்தித் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

கவிகளுக்கு அமைந்துள்ள இலக்கணக் கட்டுக்கோப்பானது கவிதைகளுக்கு இல்லை என்பர். ஓசைநயம்

கவிக்கும் கவிதைக்கும் பொதுவானதே. ஓசை பிறழாமல் அமைத்து விட்டாலே, இலக்கணமும் தானே பொருந்தி விடும்.

பொருளாழக் கருவூலங்கள் இருக்கும் இடங்கள் இவை யெனச் சுட்டிக் காட்டும் அடையாளங்களாகிய அலிபடை போன்றவைகள் வருதல் இன்றி, வழக்காற்றுச் சொற்களை மிகுதியும் வளர்த்து வளரும் தன்மையுடையது கவிதை.

பொதுமக்கள் இன்று விரைந்தும் விரும்பியும் கேட்கும் நிலையில் கவிதை நாடகங்கள், கவிதைக் காப்பியங்கள் வளர்ந்து வரும் நிலையைக் காணலாம். கதாகாலட்சேபங் கள் போலவே கவியரங்குகளும் இன்று மக்களின் பொழுது போக்கு, அறிவு புகட்டுச் சாதனமாக விளங்கி வருவதை அறியலாம்.

## ஆசிரியர் கலைக்கூத்தனார்

பூங்கோதைக் கவிதைக் காப்பியத்தை இயற்றிய ஆசி ரியர் தமிழநம்பிகலைக்கூத்தனார் தமிழ்நாட்டுத் தஞ்சை மாநிலத்து நற்பயிர். கன்மருங்கெழுந்து என்றும் ஓர்துளி வரக் காணா நன்மருந்து போல் பம்பாயில் வாழும் பண் பாட்டு நல்லேந்தல்.

மத்தாப்பூ வேலைகளைத் துணிந்து செய்பவர்களும் வியங்கோளில் தனிமதிப்பு வைப்பவர்களும் இணைந்து நின்று பறித்த குழிகளைப் பலமுறை அறிந்து விழாமல் நின்று விளங்கி வரும் நல்லவர்.

கவிதையாக்கும் அனுபவத்தைப் போலவே, பொதுத் தொண்டிலும் ஈடுபட்டு உழைத்து உழைத்து வரும் பலனைத் தெள்ள உணர்ந்ததால் தெளிவாகத் தெள்ளிய தமிழில் கூறுவதைப் பார்க்கலாம்.

"வாளாகும் சமுதாயத் தொண்டு; தேர்ந்த
வன்மையிலார் அச்செயலில் இறங்கின் ஊரில்
ஆளாகும் புரளிக்குள் சிக்கிக் கொண்டே
ஆதரவு இல்லாமல் தவிக்க நேரும்

காளான்கள் சீர்திருத்தம் பேசு தென்று
கருத்தற்றோர் அவதூறைக் கிளப்பி விட்டு
கூளாங்கல் ஆக்கிடுவர், பளிங்கை: பின்பு
கோபுரமா உருவாகும் அதனால் எங்கும்''

வீணாக வரிகளை நீட்டிச் செல்லாமல், வெட்டொன்று துண்டிரெண்டென, வினைமுற்றுக்களை இணைத்தடுக்கி, விரைந்து சொல்லி முடிக்கும் திறன் கவிதையில் பயிற்சி மிக்கோருக்கே வரும் ஆற்றல். ஒரு எடுத்துக் காட்டு.

''கேட்காமல் நின்றிருந்தான் 'சரியா' என்றாள்
கேட்டதுனைச் சரியில்லை என்றான் : சொல்லில்
சூட்சமங்கள் ஏனென்றாள்; அது இல் லாமல்
சுகங்காண வழியில்லை என்றான்; ஊரில்
ஆட்களின்றிப் போனதுபோல் தவிப்பு ஏன்? என்றாள்
அவளுக்கு மாற்றார் கால் தூசி என்றான்
கேட்கின்ற என்னையுமா? என்றாள்; மீண்டும்
கேட்காதே அதுபற்றி! என்றான்; சென்றான்.''

நிகழ்வுகளை நிரல்படக் கோத்தமைக்கலாம். ஆனால் உரையாடல்களைச் சுவைபட அமைப்பதுதான் கவிதைச் சாதனை.

குளக்கரையில் நடைபெற்ற உரையாடல்களை எத்தனை முறை படித்தாலும் அலுப்புத் தட்டாது. நல்ல இணைப்பு உரையாடல், நகைச்சுவைக்கு நல்ல ஒரு எடுத்துக்காட்டு. அதேசமயத்தில் அது சமுதாயப் பன்னீரின் சாக்கடைத் தோற்றம்; அறிஞர்கள் நெஞ்சிலிருந்து இரத்தம் பீறிட்டெழச் செய்யும் வாளின் கூர்மைப் பகுதி அது.

ஆசிரியர், மக்களின் மனங்களில் மறைந்தும் கிளர்ந்தும் வரும் எண்ணப்போராட்டங்களை அளவறிந்து எடுத்துக் காட்டி உளவறிந்து சமன்செய்து, உத்திகூறி, வழிபுனைந்து உலகைத் தெருட்ட முனைந்துள்ளார்.

(1) அன்னம்மாவின் மனப்போராட்டம். வாண்டு ஒருவன் வந்து 'உன் மகள் பூபாலன் காதலியோ' என்று நேரிலேயே சொல்லிவிட்டு ஓடிவிட்டான். அன்னம்மா தன் மனத்தில் பூபாலனை முழுமையாக எண்ணுகிறாள். அவன் குணத்தை எண்ணுகிறாள்; பொதுத் தொண்டில் இறங்கியிருக்கிறானே என அஞ்சவும் செய்கிறாள். போராட்டங்களை ஆசிரியர் முடிக்கும் நிலை அருமை யானது.

''பேச்சுக்குக் கூறுகின்றேன் அவனும் நான்தான் பெற்ற மகள்மேல் காதல் கொண்டால் ஒன்றும், ஆச்சரியம் இல்லையதை வரவேற்கிறேன்'' (2) வேம்பையன் பழி தீர்க்க எண்ணுகின்றான். ஏன் இவன் மனத்தில் இவ்வளவு கொடுமை.

''என்னஇவன் இதுபோலப் பெண்கள் பாவம் ஏற் கின்றான் என்று பலர் எண்ணக்கூடும்'' என்று எடுத்துக் கூறி அவன் மனநிலையைத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகின்றார். அவன் கயவனே; பூங்கோதையின் கற்பழித்த கல்நெஞ்சு மூடனே என்றாலும் அவனைப் பற்றிப் படிக்கும்போது, அவன் நிலையில் அவன் செய்தது சரியென்று தோன்றுமளவுக்கு, மனத்திரையின் எண்ண அலைகளை நமக்கு எழில்பட எடுத்துக் காட்டுகின்றார்.

படிக்கின்ற நம்மைச் சிரிக்க வைப்பதுபோல அழவும் வைக்கிறார்.

காதலுக்கென அகப்பொருள் பாட்டுக்களையும் துறை களையும் ஆயிரமாயிரமாக வகுத்து வாழ்ந்த தமிழகத்தில், இறைவன் ஒரு நூல் பாடினானாம். அதுவும் களவிய லாம் என்று முரசறைந்து வாழ்ந்த தமிழகத்தில்,

''.......................................இந்த
நாட்டுக்குள் காதலொரு
கேடா? சாதி
நாய்நரிகள் மத்தியிலா
மான்கள் கூட்டம்

வீட்டுக்கு வீடுஒரு
வெறியே; அன்றி
விழைவுள்ள நல்லதிருக்
காதல் ஏது?''

ஒற்றுமை எங்கே முகிழ்க்கும்! தத்தம் வாழ்க்கையில் மறைந்து கிடக்கும் நஞ்சனைய இழி செயல்கள் பிறரால் பேசப்படும்போது, அடக்கி மறைப்பதற்குப் பயன்படும் கருவியாக ஒற்றுமை வருகிறது.

''மூவருமே அத்தனையும்
மறந்து விட்டு
முறையோடு அடியக்கா
தங்கை என்று
யாவருமே ஆச்சரியம்
கொள்வி தத்தில்
அகமகிழக் கண்டுகுளக்
கரையில் நின்ற
தாவரமும் ஒற்றுமையைக்
கற்றுக் கொள்ளும்
தகைமையினை அவருறவு
விளம்பிற் றாங்கே
மூவருமே நீரிறங்கி
மூழ்கி னார்கள்
முகமலர அவர்களுளம்
நனைந்த தொன்றாய்''

## ஆசிரியரின் வேண்டுகோள் :

தமிழ்மொழியை வணங்கிக் கவிதையாக்கத் துணிந்த ஆசிரியர், அவையடக்கம் ஒன்றைப் புதுமையாகப் படைக்கிறார்.

''நெஞ்சைப் பற்றிவரும்
வேதனையைக் கவிதையாக்கிப்
பல்சுவையில் கற்பனையைக்
கலந்து இங்கே
வற்றிவரும் நல்லுள்ளம்
தீய்ந்தி டாமல்
வாழ்வதற்கு இதைப்பாய்ச்சு
கின்றேன் நீராய்''

என்று கூறி,

.........................ஊன்றிப்
படியுங்கள் பாத்திரங்கள்
வந்தும் சென்றும்
உள்ளங்கள் தொடும்வகையில்
பேசு தற்கே
உதவுங்கள் கருத்துகளை
வழங்கப் பூத்தே

என்று வேண்டுகோள் விடுக்கின்றார்.

முடிப்புரை

நான் சுவைத்த முறை இது. என அடக்கத்துடன் கூறிக் கொள்கிறேன். அது மட்டுமா! நான் சுவைத்த பல வற்றையும் இங்கே சொல்ல முடியவில்லையே என வருந் தவும் செய்கிறேன்.

வளருங் கவிஞரல்லர் கலைக்கூத்தனார். வளர்ந்த கவிஞர்: தத்துவம் மலர்ந்த கவிதைகளைத் தரணியில் தரங் குன்றாமல் விதைத்த கவிஞர்.

நானும் கவிதை எழுதுவேன். ஆனால் அவர் கவிதையே அவரை விளக்கும் கருவியாக அமைந்திருக் கிறது என்பதை இங்கே எழுதத்தான் வேண்டும்.

உண்மையிலே நல்லபொதுத்
தொண்டன்; போற்றும்
உயர்தமிழில் நற்கவிஞன்!
சிலரைப் போல
அண்மையிலே மதுக்கோப்பை,
அதுவுங் கூட
அயல்நாட்டுச் சரக்காக
வேண்டும்! இன்பப்
பெண்மையிலே தோய்ந்தான்பே
ரழகி யாக
பிரியமுடன் தன்மடியி
லிருந்து ஊட்ட
உண்மையிலே கற்பனைதான்
உதிக்கும் தேர்ச்சி
உயர்கவிதை வருமென்னும்
ரகமு மல்ல !

கவிஞரின் வேண்டுகோளை உடன்கொண்டு பூங் கோதை என்னும் இக்கவிதைக் காப்பியத்தைப் படி யுங்கள். பன்முறை படியுங்கள். சுவை பல காணலாம்.

'குளக்கரையில்' என்ற பகுதியைப் படியுங்கள். சிரிப்பு வந்தால் கலைக்கூத்தனாரை நீங்கள் இன்னும் படிக்க வில்லை என்பது தெளிவு. அழுதால் கலைக்கூத்தனாரின் தமிழநம்பின்—தமிழ் மனத்தின் இதய மலரை மெல்லத் தொடுகிறீர்கள் என்பது பொருள்.

இது நீங்களே உங்களுக்குச் செய்து கொள்ளும் மதிப்பீடு.

அகத்திற்கு அணியாக விளங்கும் அழகு மிகும் இப் 'பூங்கோதை' புறத்தேயும் உங்கள் கைகளை—நூலகங்களை நிறைவு செய்யட்டும்.

சிந்தனையாளர்களின் நல்விருந்தாய் விளங்கும் பூங்கோதை வாழ்ந்து முடிந்தவர்களின் கைகளிலே "இதோ பார் சமுதாயத்தை" என்று சொல்லக்கூடிய, இருந்து காக்கும் தொகுப்பேடுகளாக விளங்கட்டும்! வாழத் துடிக்கும் இளைஞர்களின் கைகளிலே வாழ்வுப் பாதைக் கோர் நன்மருந்து என மிளிரட்டும்!

ஆம்! காலம் ஒன்று வரும். கலைக்கூத்தனார் கவிதை களையெல்லாம் ஆய்ந்து டாக்டர் பட்டம் பெறுதற்கு அறிஞர் குழுவொன்று முயலும் நாள் வரும். அவர்கள் ஆய்ந்து வெளியிட்ட முடிவுகளை ஆழ்ந்து படிக்கும் சக்தி யோடும் திறமையோடும் நான் படிக்கும் நாளும் வரும். என் முன்னுரையை அவர்கள் எடுத்துக்காட்டி, எழுதி யிருக்கும் சிறப்புச் சான்றினை எடுத்துப் படித்து எக்களிக் கும் எதிர்காலம் எனக்கும் வரும்.

தமிழநம்பி கலைக்கூத்தனார் வாழ்க.
அவர்தம் தண்டாத தமிழ்க்கவிதை வாழ்க, வெல்க.

அன்பன் மா. சந்திரசேகரன்

# தொடக்கம்

வா'வென்றேன் நற்றமிழே !
வணங்கி உன்னை
வழிபடும்யான் ஒருசிறிய
கதையைச் சொல்லத்
தா'வென்றேன் ஆற்றலையும்
கருத்தை ஏற்றித்
தரணிக்கு வழங்கிடவும்
ஆவல் கொண்டு
பா'வென்றே கூறியிதைப்
படைத்து வைக்கும்
பணியேற்றேன் படிப்பவர்கள்
பலதும் பேசும்
நா'வென்றே உளம்பாய்ந்து
நிலைக்க! 'ஏடு'
நயந்துகற்கும் அவனியுளோர்
சுவைக்க வேண்டி !

வேண்டிநின்ற சமுதாய
ஒற்று மைக்குள்
வேண்டாமல் முளைத்துவிட்ட
உயர்வு தாழ்வை
வேண்டுமென்றே வளர்க்கின்ற
மக்கள் இன்னும்
வேண்டாமை வேண்டுமெனும்
உறுதி யோடு
வேண்டிநின்றே இதற்காக
முயற்சி செய்து
வேண்டியவர் நன்குணர
என்றன் உள்ளம்
வேண்டிடவே இன்றிதனை
வேண்டு கோளாய்
விடுகின்றேன் கற்றோரே
உம்மைச் சுற்றி !

சுற்றிவரும் இப்புவியில்
பிறந்தும், நாட்டைச்
சுற்றியுள்ள சூழ்நிலையில்
வளர்ந்தும், பேதம்
முற்றிவரும் காரணங்கள்
உணர்ந்தும், இன்னும்
முற்றாத அறிவுகளைக்
கண்டும், நெஞ்சைப்
பற்றிவரும் வேதனையைக்
கவிதை யாக்கிப்
பல்சுவையில் கற்பனையைக்
கலந்து மிங்கே
வற்றிவரும் நல்லுள்ளம்
தீய்ந்தி டாமல்
வாழ்வதற்கே இதைப்பாய்ச்சு
கின்றேன் நீராய்!

நீர்சூழ்ந்த இவ்வுலகில்
மூன்றில் ஒன்றை
நிலமென்பர்; அந்நிலத்தில்
ஆறில் ஒன்றைப்
பார்சூழ்ந்த ஆசியா
வென்பர்; இந்தப்
பாரதமே அதனுள்ளே
சிறந்த தென்பர்;
பேர்சூழ்ந்த தமிழகமோ
பாரத நாட்டின்
பெருமைக்குத் திலகமென்பர்;
பொன்னி ஆற்றின்
நீர்சூழ்ந்த காரணத்தால்
வளத்தால் பண்பால்
நிலைபுகழைப் பெற்றதனால்
கலையால் தஞ்சை

தஞ்சமென வந்தவரைக்
காக்கும் என்ற
தகைமையினால் சோழவள
நாடே என்பர்;
கொஞ்சுதமிழ் உலகென்பர்
இம்மா வட்டம்
கொள்சிறப்பை விரித்துரைக்க
மாளா தானால்
வஞ்சகமாய்ப் பேசுவதாய்க்
கருதா தீர்கள் !
வழக்கிற்கு மாறாக
உரையேன்; கொள்கைப்
பஞ்சைகளாய் வாழ்பவரும்
உண்டு; கூர்ந்தால்
பகுத்தறிவை இகழ்பவரும்
மிகவே உண்டு !

உண்டென்று சொல்லிடவோ
நிறைய வுண்டு !
உண்டுண்டு கொழுப்பவரும்
அதுபோல் ! பேதம்
பண்டென்று செப்பிடுவர் !
இல்லை யில்லை !
பண்புபற்றிப் பேசிவிட்டும்
சாதி கேட்பர் !
வண்டென்றே உழைப்பவரை
இனத்தில் தாழ்த்தி
வயற்சேற்றில் உழல்பவனை
இழிந்தோன் என்பர் !
விண்டின்று சொல்லிடிலோ
விரியும் ! அந்தோ
வேதனையை விட்டொழிக்க
மனமும் இல்லை !

இல்லையென்பார் இல்லாத
சோழ நாடு
இயற்கையிலே வளம்நிறைந்த
ததனால்; பேதம்
இல்லையென்பார் இல்லையென்ற
குறையைச் சாதி
இறுமாப்பை மதச்செருக்கைத்
தணிக்க ஓர்வன்
இல்லையென்பார் அதைக்கேட்க
நாதி இல்லை !
இடர்களைய ஆளில்லாக்
காலம்; தஞ்சை
எல்லையென்பார் பரப்புள்இக்
கதையின் போக்கை
எடுத்துவைக்கும் ஊர்ப்பெயரோ
கலையூ ராகும் !

கலையூரோ கற்பனையூர் !
இதனை யாரும்
கருதாதீர் எம்மூரோ
இவ்வூ ரென்று !
கலையூரோ பொன்னிநதிக்
கரைசெல் வோரைக்
கவர்ந்திழுக்கும் முக்கனித்தோப்
புள்ள நல்லூர் !
கலையூரை நகரென்றோ
சிற்றூ ரென்றோ
கருத்துரைக்க இயலாது !
பொலிவு தேக்கும்
கலையூரோ ஊமையையும்
கவிஞ னாக்கும் !
கவிஞனையும் தனைமறக்கச்
செய்யும் ஊரே !

ஊருக்கு நேர்கிழக்கே
தென்னந் தோப்பு;
ஒட்டியொரு பெரியவெற்றி
லைக்கொ டிக்கால்;
நேருக்கு நேர்மேற்கே
பலாமாஞ் சோலை;
நெஞ்சையள்ளும் பொன்னிநதிக்
கரையோ ரத்தில்
யாருக்கோ சொந்தமொரு
கரும்புத் தோட்டம்;
யாவருமே நீராடக்
குளமோ தெற்கே;
சீருக்கே ஓர்கோயில்
வடக்கே; பார்த்தால்
செவ்வாழைத் தோட்டமொன்று
வனப்பைச் சேர்க்கும்!

சேர்க்காத அழகெல்லாம்
வரிசை யாக்கித்
தெருத்தெருவாய் வைத்ததுபோல்
ஊரே! ஆனால்
பார்க்காத இனப்பெயரைத்
தெருவிற் கிட்டுப்
பலகையிலே அதையெழுதி
மறந்தி டாமல்
பேர்க்காத விதந்தனிலே
ஆணி கொண்டு
பெரியமரம் நட்டதிலே
அறைந்தி ருக்கும்
தூர்க்காத பாழ்ங்கிணறு
போல! கண்டால்
துயருறுவான் உண்மையிலே
மனமுள் ளோனே!

உள்ளோனும் இல்லோனும்
கலந்த தவ்வூர்;
உழைப்போனும் அதைச்சுரண்டிப்
பிழைப்போன் தானும்
கொள்ளாமல் மிகுந்துவிட்ட
தாலே நல்ல
குறிக்கோளைக் கொள்கையெனக்
கொண்டோ ருக்குப்
பள்ளங்கள் தோண்டுபவர்
நிறைய ! ஊன்றிப்
படியுங்கள் பாந்திரங்கள்
வத்தும் சென்றும்
உள்ளங்கள் தொடும்வகையில்
பேசு வார்கள்;
உதவுங்கள் கருத்துகளை
வழங்கப் பூத்தே !



# பூங்கோதை

பூத்தொடுக்க நூலெடுத்துக்
கொய்து சேர்த்த
புதுமலரை மடியிட்டு
அமர்ந்தாள்; உள்ளம்
பா'த்தொடுக்கக் கற்பனையைத்
தொடுத்துத் தன்னுள்
பலமுறைதான் உச்சரிக்கும்
கவிஞன் போல,
தோத்தரிக்கும் பெயரானைத்
தனக்கென் றாக்கித்
தோள்தழுவக் காத்திருந்து
சலித்த கோதை,
ஆத்திரத்தில் தொடுத்தமலர்ச்
சரத்தைச் சுற்றி
அவசரமாய் வெளியெறிந்தாள்
அவட்கேன் மாலை ?

மாலைதனை அவனெடுத்துக்
கூந்தல் வைத்து
மட்டற்ற மகிழ்ச்சியிலே
பங்கு பெற்று
கோலமயில் போலவளின்
அருக மர்ந்து
கோதிவிடக் கோதிவிட
மயங்கிச் சின்னப்
பாலகனைப் போலமலர்
மடியில் சாய்த்து
பாட்டொன்று சொல்லிடத்தான்
இலைஎன் றாலும்
பாலனவன் எட்டநின்று
நோக்கிக் கண்ணால்
பருகிடவும் இல்லையென்றால்
வீணே மாலை !

மாலைவந்து மாலைவந்து
போகும்; கோதை
மனங்களிக்க வழியின்றித்
தன்தாய் சொல்லும்
வேலைவந்த போதுமதில்
மனஞ்செல் லாமல்
வெறும்பாவை போலுலவி
அதனைச் செய்யும்
காலைவந்த அவளிளமை
அழகு எல்லாம்
கடும்பாலை நிலம்பெய்த
மழையோ? இன்பம்
ஆலைவந்த செங்கரும்புக்
கட்டோ? இல்லை
அழிவதற்கே நடுக்காட்டில்
மலர்ந்த பூவோ?

பூப்போலப் பூங்கோதை !
அவள்தாய் அன்னம்
புதுக்கோலம் பெற்றிருந்த
காலம் ! அந்நாள்
தீப்போலச் சமூகத்தில்
கனன்று வந்த
தீமைகளால் நெஞ்சொடிந்தோர்
கூட்டம் கூட்டி
நா'ப்பாலே ஊட்டுகின்ற
காளை ! உண்டோர்
நலம்பெற்றுத் தனையுணர்ந்து
மார்பு யர்த்தும்
பா'ப்போலப் பேசிடுவான்
அதனைக் கேட்டுப்
பற்றுவைத்தாள் காதலித்தாள்
ஒருபெண் ஈன்றாள் !

ஈன்றவளும் செல்லமகள்
தானும் ஆங்கே
இருந்தார்கள் ! கயவர்கள்
திரியும் ஊருள்
ஊன்றுகோல் இல்லாத
குருடர் போல !
ஒருதாயும் சிறுமகவும்
தலைவன் விட்டு
மூன்றேநாள் நோய்வாயில்
கிடந்து செத்தான் !
முடிவிதுதான் அன்னம்மா
கைம்பெண் ! நம்முன்
ஆன்றோர்கள் வைத்ததொழில்
ஆப்பம் சுட்டு
அரைவயிற்றைக் கழுவுவதே
விதவை வாழ்க்கை !

வாழ்ந்துள்ளார் இதுவரையும்
அவளும் தாயும்
வாழ்க்கையென அதையங்கு
கொள்தற் கில்லை;
சூழ்ந்துள்ள சமுதாய
அமைப்பில் யாரும்
சுற்றமெனக் கொள்வார்க
ளில்லை; ஆனால்
வீழ்ந்துள்ளார் என்றுமட்டும்
நாக்கூ சாமல்
விடியும்வரை ஊரார்கள்
தங்கள் பேச்சில்
தாழ்ந்துள்ளதைச்சொல்வர்;
அறிந்தும் கூடத்
தாயுழைப்பை நம்பிமகள்
வந்தாள் கற்று !

கற்றுவந்தாள் பூங்கோதை
　ஒழுக்கம் கல்வி
கருத்துடனே உலகியலும்
　கருத்தில் கொள்ளப்
பெற்றுவந்தாள் பள்ளியிலே
　முதல்வி என்னும்
பெயரோடு போட்டிகளில்
　பரிசும் சேர்த்துப்
பெற்றுவந்தாள் நல்லாசான்
　பரிவும் பற்றும்
பிறரன்பும் தனையீன்ற
　தாய்க்கும் தொல்லை
சற்றுவந்து சாராமல்
　அரசு தந்த
சலுகைநிதி அத்தனையும்
　பெற்றாள் அன்றோ?

அன்றங்கே பள்ளிக்குச்
　செல்லும் போதும்
அறைதனிலே ஆசிரியர்
　இலையென் றாலும்
ஒன்றங்கே நடப்பதுண்டு;
　அதுதான் தன்னை
ஒருகண்ணால் பார்ப்பதுவும்
　கேலிப் பேச்சும்
மன்றங்கள் தரும்பரிசு
　அனைத்தும் இந்த
மயக்கிக்கோ? என்றெரியும்
　எரிச்சல் எல்லாம்
இன்றிங்கே காணலுற்றாள்
　கோதை ! தூய
இளநெஞ்சு மாசுற்று
　வளர்ந்தால் நாடு

நாடாக வாயிருக்கும்?
நரியோ டோநாய்
நடமாடும் காடாகும் !
உழைக்கும் ஏழை
ஆடாகச் சிக்கிடுவான்;
கயமை மேலும்
அசுரஉருப் பெற்றுவிடும்;
சிறுவர் நெஞ்சில்
ஊடாடும் பேதமையைப்
பெற்றோர் போக்கும்
உளப்பாங்கில் வீடேது?
இல்லை இங்கே
வீடாக ஒவ்வொன்றும்
மிளிரு தென்றால்
விதையிடுமே பொறாமைதனை
வளர்க்கும் பள்ளி !

பள்ளியிலே பலபோட்டி
தன்னில் கோதை
படிப்படியாய் வென்றாள்பல்
லாண்டாய்; ஆனால்
வெள்ளிவிழாத் தமிழ்க்கவிதைப்
போட்டி யில்தான்
வெல்கின்ற வாய்ப்பிழந்தாள் !
அதனால் தானும்
அள்ளிவந்த இத்தனைநாட்ப்
பரிசை எல்லாம்
அவனிடத்தில் தோற்றதினால்
வெறுப்பில் லாமல்
உள்ளஅவன் திறமையைப்பா
ராட்ட லானாள்
உள்மனத்தில் நாணியபூ
பாலன் பேச !

"பேசத்தான் முயலுகின்றேன் !
ஏனோ நாக்குப்
பின்னிக்கொள் கின்றதகை
விளக்க உள்ளம்
கூசத்தான் செய்கிறது
நானென் செய்வேன் ?
குன்றிவிட்டேன் பண்பினிலே
நன்றி !" என்றான்.
"பேசத்தான் முடியாது
தங்கக் கோப்பை
பெற்றதிலே உண்டான
மகிழ்ச்சி ! ஆனால்
கூசத்தான் செய்கிறது
உள்ளம் என்றே
கூறியதன் பொருளென்ன ?"
என்று கேட்டாள்.

கேட்டதற்குப் பதிலுரைக்க
மறந்தான்; ஆனால்
கீழ்மேலாய்ப் பார்த்தவளை
அளந்து, மாற்றான்
தோட்டத்து மல்லிகையின்
மணமோ ? இல்லை
தூண்டாத மணி விளக்கின்
சுடரோ ? அன்புக்
கோட்டத்து வாயிலுக்கு
முகப்போ ? பண்புக்
கோமகளோ? மானினத்தில்
தனித்து வந்து
வாட்டத்தை ஏன்கொடுக்கின்
றாளோ ? என்று
வாய்திறவா மல்கவிதை
பாடித் தானே ?

தானேதன் கேள்விதனைப்
பறக்க விட்டுத்
தத்தளித்தாள்; அவனோக்குத்
தாங்கி டாமல்
ஏனோயின் றிவனையவன்
புகழு தற்கு
எத்தனித்தோ மென்றெண்ணித்
தலைகு னிந்தாள்;
ஊனோதன் உள்ளுணர்வை
அழுத்த, கோதை
ஓடிடத்தா நினைக்கையிலே
அவனும் சொன்னான்:
"நானோயின் றொருபரிசைப்
பெற்றேன்; முன்பு
நம்பள்ளிப் பரிசனைத்தும்
நீயே பெற்றாய் !

பெற்றாய்நீ என்பதனால்
மனத்துள் நானும்
பிறரோடு சேர்ந்துன்மேல்
பொறாமைப் பட்டேன்;
கற்றாலும் கல்விவழி
நடந்தி டாமல்
கடுகடுத்தேன் நீயடையும்
பெருமை கண்டு;
விற்றேநா னென்னறிவை !
பண்பு கொண்டு
விடுவித்தே எனக்கீந்தாய்
கோதை ! உன்னைப்
பெற்றோரைப் போற்றுகின்றேன் !
நான்த ராத
பெருமையைநீ தந்ததனால்
கூச்சம் !" என்றான்.

என்றவனும் தலைகுனிந்தான் !
அன்னை வீட்டில்
எதிர்பார்ப்பாள் என்றெண்ணி
விரைந்தாள் கன்னி
என்றைக்கோ நடந்ததிந்த
நிகழ்ச்சி; இன்னும்
இனிக்கிறதே அவளுளத்தில்
கற்கண் டாக !
இன்றைக்கோ அக்கவிஞன்
கோதை நெஞ்சில்
இடம்பிடித்து அமர்ந்துள்ள
தலைவன் ! ஆனால்
என்றைக்கோ இதனைஅவன்
புரியும் நன்னாள் !
இவளோதன் மனம்விட்டுக்
கூற மாட்டாள் !

மாட்டாளே தன்நெஞ்சில்
நிறைந்தே உள்ள
மாளாத காதலினை
வெளியே ! நங்கை
நோட்டத்தைச் சொல்லாமல்
உள்ளப் பாங்கில்
நோயாளி போல்மயங்கிக்
குழம்பி நின்று
வாட்டத்தால் தேய்கின்றாள் !
உணவைக் கூட
வாய்சுவைக்க மறுக்கிறது !
மணக்கும் பூக்கள்
நாட்டத்தை வெறுக்கிறது
நெஞ்சு ! பெண்கள்
நாணம்தன் னுடன்பிறந்தே
அழிக்கும் நோயோ?

---

# அன்னம்மா

நோயோதன் உடல்நிலையைக்
கெடுக்க வந்து
நூறுமுறை செல்வதுடன்
கருவங் கொண்ட
காயேபோன் றலைகிறது !
தந்தை யைப்போல்
கற்றாயும் செத்துவிடின்
அவர்கள் ஒன்றித்
தோயாநற் காதலிலே
தோய்ந்து பெற்ற
தூமணியாம் பூங்கோதை
தனித்து நின்று
ஓயாமல் கண்கலங்க,
அவளைப் பார்த்து
ஊருலகம் நாளைநின்று
பழியே பேசும் !

பேசுவது அவ்வூரின்
பழக்கம்; அன்னம்
பெற்றஅனு பவங்கொஞ்ச
மல்ல; பாடும்
ஆசுகவி கற்பனையும்
தோற்கும்; வாங்கி
ஆக்கிவைத்த குழம்பிலுள்ள
மீன்கள் நேற்றுப்
பேசியது துள்ளியது
எனச்சொல் வார்கள் !
பேசாமல் யாமதனைக்
கேட்டால் பொய்மைப்
பாசங்கள் வழிந்தோடக்
குழைவர்; அன்றேல்
பாவத்தைச் சுமத்திடவும்
தயங்க மாட்டார் !

தயங்காமல் கைம்பெண்ணைக்
கன்னி என்பர்;
தங்கமென்பர் வைரமென்பர்;
அவளின் காதல்
முயங்கித்தான் பெறவேண்டும்
என்பர்; நாங்கள்
முயற்சித்தால் உமக்குமணம்
முடிப்போ மென்பர்;
மயக்காத ஆட்களையும்
மயக்கும் பேச்சில்
மத்தாப்பூ வேலைகளைத்
துணிந்து செய்வர்;
வியங்கோளில் தனிமதிப்பு
அளிப்பர்; நம்பின்
விதியென்றே கண்கலங்கி
நிற்க வேண்டும் !

வேண்டுமெனில் கற்புக்கே
அரசி என்பர்;
வேண்டாத பெண்களெல்லாம்
விலைமா தென்பர்;
கூண்டுக்குள் கிளிபோல,
பொன்சிற் பத்தைக்
கோவிலுக்குள் பூட்டிவைத்துக்
காத்தல் போல,
ஆண்டுபதி னெட்டாக
அவள்தான் பெற்ற
ஆசைகள் கோதையைத்தான்
காத்தும், நேற்றோர்
வாண்டுவந்து "பூபால
னென்பான் உன்றன்
வண்ணமகள் காதலனோ
அம்மா ?" என்றான்.

என்றவனின் சொற்கேட்ட
பொழுதே அன்னம்
எரிநெருப்பு மிதித்தாள்போல்
துடித்தாள்; சொல்லிச்
சென்றவனோ சிறுபிள்ளை !
அதனால் என்ன ?
தீனியன்றோ ஊரார்க்கே
இந்தச் செய்தி !
அன்றாடப் பாடுகளில்
ஒன்று; பெண்கள்
அனைவருக்கும் குளக்கரைக்குத்
தெருப்பேச் சுக்கும்
குன்றாத சுவைச்செய்தி
யன்றோ ? இந்தக்
கொடுமைதனை எவ்வாறு
பொறுப்பாள் அய்யா ?

அய்யாக்கண் ணிருந்திருந்தால்
இதுபோ லெல்லாம்
அலரெழுப்ப அஞ்சிடுவர் !
பலரும் சேர்ந்து
பொய்யாகச் சொன்னாலும்
மெய்போல் ஆகும் !
புதுச்செய்தி இச்செய்தி
அவர்க்கே ! ஊரார்
ஒய்யாரம் தெரியாதா
பலர்க்கும்? அய்யன்
உழைத்ததுபோல் ஊருக்கே
உழைப்ப வன்மேல்
செய்யாத குற்றத்தைச்
சுமத்தும் பாங்கை
தெரிந்தவள்தான் அன்னம்மா !
அவளின் நாட்டம்;

நாட்டமெலாம் பாலனுக்கு
நாட்டின் மீது!
நல்லவர்கள் பகுத்தறிவுக்
கொள்கை பேசும்
கூட்டமெலாம் அவன்பேச்சின்
தமிழைக் கேட்க
கூடிடுமே! அதுகண்டே
ஊரார் காழ்ப்பு
கோட்டமெலாம் பழிசுமத்தல்!
என்றால் நல்ல
நுண்ணறிவு மக்களென்று
பெறுவர்? உள்ளக்
கோட்டமெலாம் நிமிர்த்திவிடத்
துணிந்தே னென்று
கூறுபவன் அன்னத்தை
வணங்கிப் போவான்!

போகையிலும் வருகையிலும்
அன்னம் மாவின்
பூத்தமுகம் வாடுதலைக்
கண்டா னென்றால்,
"சோகத்தோ டேனம்மா
இருக்கின் றீர்கள்?
சொல்லுங்கள் என்றுபல
புகழ்ந்து பேசி
வேகத்தை ஊட்டியவர்
சமுதா யத்தின்
வீண்பேதம் மாற்றியவர்
நீங்கள் இன்று
சோகத்தில் மூழ்கிவிட
லாமோ?" என்று
சோதிப்பான் மனங்குளிர
மகிழ்ந்து நிற்பான்.

நிற்பானா? இல்லைபெரும்
பணிகள் காத்து
நிற்கிறது என்றுரைத்து
விரைந்து போவான்;
விற்பானா நற்பொழுதை?
மனப்பே தங்கள்
வினென்று மக்களுக்கு
விளக்கம் கூறக்
கற்பானே மேதைகளின்
கருத்தை நன்கு;
காலத்தைப் பொன்னாக
மதிக்கும் பாங்கில்
விற்பனனே பூபாலன்
என்றால், பற்றின்
வீண்புகழ்ச்சி இல்லையது
முழுதும் உண்மை !

உண்மையிலே நல்லபொதுத்
தொண்டன்; போற்றும்
உயர்தமிழில் நற்கவிஞன் !
சிலரைப் 'போல
அண்மையிலே மதுக்கோப்பை
அதுவும் கூட
அயல்நாட்டுச் சரக்காக
வேண்டும் ! இன்பப்
பெண்மையிலே தோய்ந்தான்பே
ரழகி யாகப்
பிரியமுடன் தன்மடியி
லிருந்தே ஊட்ட
உண்மையிலே கற்பனைதான்
உதிக்கும் நல்ல
உயர்கவிதை சுரக்குமெனும்
இனமு மல்ல !

"அல்லஅவன் நிகர்த்ததொரு
மகனை நாங்கள்
அடையலையே!" என்றுபலர்
எண்ணிக் கொள்ள,
நல்லதொரு நெறியறிந்த
வீர னாக
நடைபோட்டு வருகின்றான்
நாட்டில் எங்கும்;
சொல்லவொரு கொள்கைதனைக்
கைக்கொண் டுள்ளான்
சொகுசாக அதைஇளைஞர்
உள்ளம் ஏற்க
வெல்லத்துள் நல்மருந்தை
வைத்தே ஊட்டும்
விதம்போலப் பூபாலன்
மேடைப் பேச்சு!

"பேச்சுக்குக் கூறுகின்றேன்;
அவனும் நான்தான்
பெற்றமகள் மேற்காதல்
கொண்டா லொன்றும்
ஆச்சரியம் இல்லையதை
வரவேற் கின்றேன்;
அன்னோனை ஏற்றுமரு
மகனாய் என்றன்
மூச்சுள்ள போதேஓர்
மணத்தைச் செய்து
மூத்தோர்நல் வாழ்த்துகளைக்
கேட்டும் ஊரார்
ஏச்சுக்குத் தப்பிடுவேன்"
என்றே அன்னம்
இதயத்துள் ளேநினைத்து
மகிழ்ச்சி காண்பாள்!

காண்பதற்குச் சுவையான
காட்சி பெற்றோர்
கண்குளிரும் மணக்காட்சி
ஒன்றே ! அன்றி
வீண்பழியைச் சுமக்கின்றான்
மகள்தா னென்றால்
வேதனையை அனுபவிப்போர்
பெற்றோர் அன்றோ ?
ஆண்களுக்கு இப்பாழும்
சமுதா யத்தில்
அத்தகைய பழியையொரு
சிறப்பென் பார்கள் !
மாண்புடைய பெண்ணொருத்தி
பழிஏற் றிட்டால்
மாள்வதன்றி அவளுக்கோர்
வழிதான் உண்டோ ?



# குளக்கரையில்

"உண்டாமே கேட்டாயா
ஏமாளீ ! நம்ம
ஊரெல்லாம் பேச்சாக
இருக்கும் செய்தி !
கண்டாளாம் கோமளமும்
கண்ணால் நேற்றுக்
காத்தமுத்து என்னிடத்தில்
சொன்னார்" என்று!
தண்டோரா வாய்திறந்தாள்
குளிக்க வந்த
சந்தானம் பெண்டாட்டி
வள்ளி யம்மை;
"கொண்டாடி சங்கதியை"
என்றாள் ஊருக்
கோயில்பூ சாரியிளம்
மனைவி வந்து

வந்தாளச் சமயமொரு
துடுக்குக் காரி
வாய்கொஞ்சம் நீளமவள்
பெயரோ சாந்தி :
"இந்தாடி வள்ளியம்மே !
நீயும் கோமும்
எத்தனை நாள் காத்தமுத்து
கூடக் கூட்டு ?
சந்தானம் உன்புருசன்
சிங்கப் பூரில் !
சாய்ங்காலம் ஊர்ப்பயல்கள்
உங்கள் வீட்டில் !
மந்தாரப் போதானால்
மேய்கின் றீர்கள் !
மாய்மாலப் பேச்சேண்டி ?"
என்று கேட்டாள்.

கேட்டதனைக் கேட்டவுடன்
கீழ்மே லாகக்
கிடக்கும்தன் தோள்துணியைத்
துறையில் வீசி
ஊட்டத்தோ டொருமுறைவாய்
காறித் துப்பி
உருத்தந்தாள் சினத்திற்கு ;
பார்க்க நேர்ந்தால்
மூட்டத்தை வண்ணானும்
பிரிக்கும் போது
மொதுமொதுக்கும் வெள்ளாவிப்
பானை ஒக்கும்
காட்டத்தைக் காட்டிநின்ற
வள்ளி தான்தன்
கைத்தோளளத் தாவாயில்
இடித்து நோக்கி,

"நோக்கத்தைச் சொல்லிடடி
உலையில் இட்ட
நொய்யரிசி கொதிதாங்கா
மூளைக் காரி !
ஏக்கத்தை என்னிடமா
காட்ட வந்தாய் ?
எங்கேனும் தடிப்பயல்கள்
தேடிப் போயுன்
ஆக்கத்தைத் தணித்துக்கொள்
இங்கே உன்றன்
ஆட்டமொன்றும் பலிக்காது !
மிஞ்சிப் போனால்
நாக்கைத்தான் இழுத்துவைத்தே
அறுப்பேன் ! உங்கள்
நாதியெலாம் வள்ளியின்கால்
தூசாம் !" என்றாள்.

என்றவுரை கேட்டவுடன்
சாந்தி கொஞ்சம்
இதமாகச் சிந்தித்துச்
சினந்த ணிந்து
நின்றஇடம் விட்டுரமா
அருகில் வந்து
''நினைத்தேன்நான் நீங்களிரு
பேரும் சேர்ந்து
அன்றைக்குக் கோவிந்தன்
கூட நானும்
அவசரமாய்ப் படம்பார்க்கப்
போன தைத்தான்
இன்றைக்குப் பேசுவதாய் ''
என்றாள்; பூத்த
இளஞ்சிரிப்பால் வள்ளிமனச்
சினம்கு றைந்தாள் !

''குறைந்துவிடப் போவதில்லை
விடுவோம் ! ஆனால்
கூறுரமா சாந்திசெய்தி
பேசி னோமா ?
மறைந்துவிட்ட சங்கதியைக்
கிளறிப் பார்த்தால்
மானபங்கம் யார்க்குரமா ?
நீகூ டத்தான்
கறையில்லாப் பூசாரி
மனைவி யானாய்
கண்ணேண்ணு அழைக்கின்ற
தர்ம கர்த்தா
முறைபோட்டுப் பேசுகின்றார் ;
அவர்தான் பெற்ற
மூத்தமகன் வேம்பையன்
உனது கூட்டு ''

கூட்டென்ற வள்ளியின்சொல்
ரமாவின் நெஞ்சில்
குத்திற்று முள்போல;
இதுவ ரைக்கும்
பாட்டொன்றும் நம்மீது
திரும்ப வில்லை
பக்குவமாய்த் தப்பியதாய்
நினைத்தாள்; இப்போ
கூட்டுக்குள் சிக்கிவிட்ட
ஆந்தை போல
குர்ரென்றே ஆகிப்பின்
பேச லானாள் :
''வீட்டுக்கு வீடுநிலைப்
படிதான் சும்மா
விடுபேச்சை வள்ளி''யென
மேலும் சொன்னாள்.

சொன்னாளா பேச்சுக்கே
இல்லை ! தேர்ந்து
சூசகமாய்ச் சிலசான்று
காட்டி னாளே !
''அந்நாளில் பெரியோரும்
எழுதி வைத்த
அத்தனையும் இன்றமர்ந்து
புரட்டி னாற்போல்
முந்நாளில் உள்ளபல
சேலை கட்டும்
முகங்களையும் முறைப்படுத்திக்
காட்டிச் சொன்னாள்;
எந்நாளில் ஏதில்லை!
எல்லாம் பெண்கள்
ஏற்பட்ட காலமுதல்
நடக்கும் உண்மை !

உண்மையிலே உத்தமிநா
னென்பாள் தேடி
உள்மனத்தைப் புறத்தெடுத்துத்
துருவிப் பார்க்க
அண்மையிலே எப்புதுவிஞ்
ஞானி மற்றும்
ஆண்டவனா லும்கூட
முடியா தென்ற
உண்மையினை நன்குணர்ந்த
படியால் பெண்கள்
ஒற்றுமையாய்ப் பொய்பேசி
வாழு கின்றோம்,
பெண்மயிலே!" என்றுரைத்தாள்
ஒயிலாய்! கேட்ட
பேதைஇரு வர்சிரிக்கச்
சிரித்தார் மூவர்!

மூவருமே அத்தனையும்
மறந்து விட்டு
முறையாக "அடியக்கா
தங்கை" என்று
யாவருமே ஆச்சரியம்
கொள்வி தத்தில்
அகமகிழக் கண்டுகுளக்
கரையில் நின்ற
தாவரமும் ஒற்றுமையைக்
கற்றுக் கொள்ளும்
தகைமையினை அவருறவு
விளம்பிற் றாங்கே!
மூவருமே நீரிறங்கி
மூழ்கி னார்கள்
முகமலர அவர்களுளம்
களைந்த தொன்றாய்!

"ஒன்றதுதான் " பூபாலன்
கோதை பற்றி
ஓயாமல் கதையளக்க
ஆசை ; ஆனால்
இன்றிதனைப் பேசிடவோ
பொழுது இல்லை
என்பதனால் அவசரமாய்க்
குளித்த மூவர்
என்றேனும் ஓர்நாளில்
சமயம் வாய்த்தால்
இன்றேபோல் ஒத்துவந்தால்
அவர்கள் காதல்
நன்றாக ஆராய்வோம்
என்றே எண்ணி
நடந்தார்கள் ; ஊர்ப்பேச்சு
மெய்யோ பொய்யோ ?



# வேம்பையன்

"பொய்யாக ஓர்கதையைப்
புனைந்து விட்டேன் ;
பொழுதெல்லாம் வெறும்வாயை
மெல்வோ ருக்கு
நெய்யில்தேன் அவல்பிசைந்து
கொடுத்தாற் போல
நிதமூர்க்குப் பொய்ப்பேச்சே
இரையா யிற்றே !
அய்யய்யோ என்றிங்கு
மகளும் தாயும்
அழுதாலும் புரண்டாலும்
எவரே சென்று
மெய்யாக ஆதரவு
தருவர் ? முன்பு
மிகத்திமிராய்ப் பேசுவளாம்
எனது அத்தை "

அத்தையென்றோ வாய்தவறிச்
சொன்னான் ! அன்னம்
ஆண்டாண்டாய்க் காத்துவந்த
பெருமை தன்னைச்
சொத்தையென்றே செய்தாளாம் !
குலம்கெ டுத்துச்
சூர்ப்பனகை யானாளாம் !
நஞ்சு தோய்ந்த
வித்தொன்றைப் பெற்றாராம்
தாத்தா ! அப்பா
விம்பழித்த உடன்பிறப்பாம் !
அவனே செத்தும்
சத்துதனை ஊட்டுவளாம்,
மகளைக் கூடச்
சமுதாயத் தொண்டுசெய்ய
அனுப்பு வாளாம் !

வாளாகும் சமுதாயத்
தொண்டு; தேர்ந்த
வன்மையிலார் அச்செயலில்
இறங்கின் ஊரில்
ஆளாகும் புரளிக்குள்
சிக்கிக் கொண்டே
ஆதரவு இல்லாமல்
தவிக்க நேரும் !
காளான்கள் சீர்திருத்தம்
பேசு தென்று
கருத்தற்றோர் அவதூறைக்
கிளப்பி விட்டுக்
கூளாங்கல் ஆக்கிடுவர்
பளிங்கை! பின்பு
கோபுரமா உருவாகும்
அதனால் எங்கும் ?

எங்கெங்கோ நிலமுண்டாம்
அறியான் இவ்வூர்
எழிற்கோயில் தர்மகர்த்தா
வேம்பன் தந்தை !
அங்கங்கே உள்ளபண்ணை
ஆட்க ளெல்லாம்
ஆதரித்துப் படியளந்து
இவ்வூ ருக்குள்
மங்காத புகழோடு
வாழும் நாளில்
மாற்றாரும் போற்றுகின்ற
சமயம் பார்த்து
திங்களுடன் மாசுவந்து
சேர்ந்தாற் போலத்
தீக்குணத்தாள் உடன்பிறந்து
தொலைத்தாள் ; தந்தை !

தந்தையைப்போல் ஈவிரக்கம்
காட்டிப் பின்பு
தலைக்குனிவை ஏற்கானாம்
வேம்பன் ! ஊரார்
முந்தையர்பால் கொண்டிருந்த
மதிப்பை வீணாய்
முறைதவற விடுவானோ
மூத்த பிள்ளை ?
கந்தையுடை தானுடுத்தி
ஆப்பம் விற்றுக்
கடைநிலையில் வாழ்கின்ற
மகட்கும் தாய்க்கும்
சிந்தையிலே இத்தகைய
துணிவி ருந்தால்
திரள்செல்வ வேம்புநிலை
சொலவா வேண்டும் ?

வேண்டுமென்றே இவ்வூரில்
வாழ்கின் றாளாம் !
"வேண்டாம்நீ எங்கேனும்
போய்ஓர் ஊரில்
வேண்டுமென்றால் உன்வாழ்வை
அமைத்துக் கொள்க ;
வேண்டுபொருள் தருகின்றேன் ;
இங்கே எங்கள்
மாண்புகெட நிற்காதே !"
என்றன் னாளில்
மண்டியிட்டு வேம்புதந்தை
கெஞ்சி னாராம் !
ஆண்டியந்த அய்யாக்கண்
பேச்சைக் கேட்டு
அன்னமதை மறுத்தாளாம்
துணிச்ச லோடு !

"ஓடெடுத்துப் பிழைத்தாலும்
இவ்வூர் விட்டு
ஓடுபவன் நானல்ல
வாடி!" என்று
பீடுநடை போட்டானாம்
அய்யாக் கண்ணு
பின்செல்ல அன்னம்மா!
நானென் றாலோ
ஆடுவெட்டிக் காளிக்குப்
படைப்ப தைப்போல்
அக்கணமே தொலைத்திருப்பேன்!
பாவம் தந்தை
கூடஅவள் பிறந்துவிட்ட
பாசத் தாலே
கோவென்று அழுதாராம்"
அந்த நாளில்!

நாளெல்லாம் சுகபோக
வாழ்க்கை வாழ்தல்
நலமென்று அவளாசை
கொள்ள வில்லை;
ஊழென்றா லும்அதையான்
வெல்வேன் என்ற
உறுதியைத்தன் இலட்சியமாய்க்
கொண்டாள் அன்னம்!
தாழ்ப்பெண்ணைச் சுயநலத்தில்
உயர்வு தாழ்வைக்
கடைப்பிடிக்கும் மாந்தரின
இழிந்த போக்கைத்
தூளாக்கத் துணிந்திருந்தாள்!
ஆனால் கெட்ட
சூழ்ச்சிபணத் திமிரெதிர்க்கச்
செய்வாள் என்னே?

என்னஇவன் இதுபோலப்
 பெண்கள் பாவம்
ஏற்கின்றான் என்றுபலர்
 எண்ணக் கூடும் !
முன்னமிவன் சொன்னதெல்லாம்
 ஒதுக்கித் தள்ளி
முற்றிற்று எனும்வாய்ப்பை
 ஏற்க வேம்பு
இந்நேரம் புதுவாழ்வு
 செழித்துப் பூத்தே
இன்பமுடன் வாழுவதைப்
 பலரும் மெச்சப்
பொன்னேரி பெரியபண்ணை
 மருமா னாகிப்
பெரும்நல்ல பெயருமன்னம்
 தொடர்பால் போச்சு !

போச்சுஅவன் செல்வத்தில்
 செல்வம் சேரும்
பொன்னான நல்வாய்ப்பு !
 போச்சு மானம் !
போச்சுஅவன் பரம்பரையின்
 பெருமை ! அன்று
பொன்னேரி பெரியபண்ணை
 சொன்ன சொல்லால் !
போச்சுஅவன் பேராசைக்
 கனவு ! இன்பப்
பொன்மானை தண்மதியை
 புல்லும் பேறு
போச்சு ! அவன் நெஞ்சிலவுள்
 துவளும் வாய்ப்பு
பொய்க்கவழி செய்தவரை
 விடுவா ருண்டோ ?

"உண்டாய்யா இதுபோல
உலகில் எங்கும்
உயர்குடியாம் எமதுபரம்
பரையில் நீயும்
கொண்டாய்யா ! பெண்ணென்றால்
கொடுப்ப தற்குக்
குறைந்தேனா உம்போல
நானும் இங்கே
கண்டபயல் தன்னோடு,
பிறந்தா ளைப்போய்க்
கலப்பதற்கு விட்டதன்றி
ஊரில் வைத்துக்
கொண்டாடி மகிழ்கின்றாய் !
மானம் போயின்
குறையாத பெருஞ்செல்வம்
எவர்க்கு வேண்டும் ?"

வேண்டுமென்றே பொன்னேரி
யார்கேட் டாரம்
வேதனைச்சொல் தாக்குண்டு
திரும்பி வந்து
கூண்டுக்குள் சிக்கியும்தன்
சிறகு மற்று
கூவிடவும் சக்தியற்ற
பறவை போல
நீண்டுவளர் தன்மேனி
சுருட்டிக் கொண்டு
நீள்மூச்சு விட்டழுத
தந்தை காட்சி
மாண்டுவிடத் தூண்டியது
வேம்ப னைத்தான்
மாள்வதிலே பயனென்ன
வஞ்சம் ஏற்றான் !

"ஏற்றுள்ள என்னுறுதி
தவறு என்போர்
ஏரான மாயிருக்கக்
கூடும் ; ஆனால்
ஊற்றுக்கண் இல்லாத
கிணற்றைப் போல
ஊருலகம் எனைமதிக்க
எனதுள் ஆசை
காற்றுவெளி அற்றஇட
மாகி இன்பம்
காதறுந்த ஊசியெனப்
போச்சே ! யாரே
சாற்றிடுவர் இந்நிலைக்கே
இரக்கம் ? வந்து
சாற்றிடுவீர் எனைத்தனக்கே
ஒப்பாய்க் கண்டே !

கண்டாரை வாட்டுகின்ற
கண்கள் ; நேரில்
காணார்க்குத் தூதுவிடும்
கூந்தல் ; கண்ணால்
உண்டாரைத் தூங்கவிடாத்
தோற்றம் ; இந்த
ஊருக்கே பேரழகி !
காணும் சுற்றி
வண்டாக மொய்ப்பதற்கு
மலரே ! சாதி
வழக்கொழிந்து பிறந்ததனால்
எனது கைக்குள்
செண்டாக்கிக் கோதைதனைக்
கசக்கித் துய்த்துச்
சீ ! யென்று விட்டெறிவேன் !
வரட்டும் காலம் !

காலத்தை எதிர்பார்த்துக்
கோதை காக்கும்
கற்புக்குக் குறிவைப்பேன் !
மயக்கத் தூதாய்
ஞாலத்தைத் தன்னறிவால்
அழகால் பேச்சால்
நற்சூழ்ச்சி மிகுதிறத்தாள்
ரமாவை வைத்து
மூலத்தைச் சுவைத்துவிட்டுச்
'காளி தாசன்'
முன்கண்ட துஷ்யந்தன்
ஆவேன் ! ஆகி
ஓலத்தைக் கேட்டிருப்பேன் !
எனது வாழ்வின்
உன்னதத்தைக் கெடுத்தவரைக்
கெடுப்பேன் நானே !''



# பூபாலன்

நானேயென் நானோடு
நானாய் நின்று
நானென்ற தன்னலமும்
நசிந்து மக்கள்
நானேயென் நானென்று
உணர்ந்து பின்பு
நானாகி நாட்டுநிலை
பரிந்து நோக்கி
நானேயென் ஊன்உயிருக்
கிரங்கல் போன்று
நானான நாடுமொழி
ஏழ்மை எல்லாம்
நானேயென் றறிவதிலே
மெய்ம்மை கண்டு
நானேர்மை அன்புதனைத்
தொண்டாய் ஏற்றான்.

ஏற்றதிந்தச் சமுதாயத்
தொண்டே என்றும்
ஏற்றிருந்தான் தன்மனதில்
மகிழ்வு தங்க
ஏற்றதனைப் புரிந்துவந்தான்
தன்வாழ் நாளில்
இந்நாட்டில் நிலவிவரும்
பேதம் நீக்கி
மாற்றத்தைக் காண்பதற்குத்
துடித்த பாலன்
மாடெனவே உழைப்பதற்குத்
துணிந்தான்! இங்கு
கூற்றத்தை ஒக்குமிந்த
மடமைக் கொள்கை
கோடிவழி யாகஇவண்
நுழைந்த கேடா!

கேடுவிளை விக்கின்றான்
பாலன் என்று
கேவலமாய்ப் பலபேர்கள்
பேசக் கேட்பான் ;
வீடுமிலான் நிலமுமிலான்
உறவி னோர்கள்
வேண்டியவர் என்றுரைக்க
எவரு மில்லான் ;
பாடுபட வந்துளனாம்
சமூகத் திற்குப்
பார்த்தாலே தெரிகிறது
புரட்டுக் காரன் ;
தேடுதற்கு நாதியிலான்
அனாதை என்று
தேவையில்லா நாப்படைத்தோர்
அவனைத் திட்ட !

திட்டட்டும் திட்டுபவர்
திட்டித் திட்டித்
தேயட்டும் அவனுக்கென் ?
அவனின் கொள்கை
எட்டெட்டும் எங்கெங்கும் !
முற்போக் கெண்ணம்
எழும்பட்டும் போர்முரசாய் !
இளைஞர் கூட்டம்
தட்டட்டும் தோள்களைத்தான் !
வளர்ந்த பேதம்
தவிடுபொடி யாகட்டும் !
வருங்கா லத்தில்
கிட்டட்டும் தமிழன்தான்
உலகி லேயே
கீர்த்திமிகு கிழமையொடு
வாழ்ந்த பேர்தான் !

"பெயர்தானே கெடுகிறது ?
பேசா மல்தன்
பிழைப்புதனைப் பாருங்கள் !"
என்று தன்மேல்
அயர்வின்றி அன்புசெய்வோர்
காணும் போதே
அறிவுரைகள் கூறுவதைப்
பாலன் கேட்டுப்
"பயிர்தானே கெடுகிறது !
மருந்து வைப்போம்
வயல்கெட்டுப் போகாமல்
பார்ப்போம் ! சும்மா
பெயர்தானே கெடுகிறது ?
நான்கெ டாமல்
பெயர்பற்றிக் கவலைகொள
வேண்டா" மென்பான்.

என்போலிச் சமூகமொழி
வளர்ச்சிப் பற்றில்
இனியொருவன் மனஉறுதி
பெற்றான் என்றால்
முன்போற்றான் இல்லையென்றே
ஆசை மீறி
முறைதவறிப் பொருள்தேடான் !
அறியான் முன்போய்
என்போற்றான் நீயென்று
தழுவி ஏய்த்தே
இடம்பிடிக்கத் தலைவன்போல்
நடிக்கான் ! அன்பால்
பொன்போற்றான் ஒளிவிடுவான்
இப்ப ணிக்குள்
புகுந்தூயன் வெகுசொற்பம் ;
கயவன் கூட !

கூடுதலாய்ச் செல்வங்கள்
சேர்த்துக் கொண்டோன்
கொள்கையுடன் சேவைசெய்ய
ஒவ்வான் ; கல்வி
ஏடுகளைச் சற்றதிகம்
புரட்டி னானோ
இன்னலின்றிப் புகழ்தேட
முனைவான் ; பாவம்
மாடுகளாய் உழைப்போனுக்
காசை ; ஆனால்
மார்க்கமில்லை என்செய்வான் ?
வறுமை கொட்டி
ஒடுகளாய்த் தேய்பவனைப்
பொழுதே தின்னும் ;
உகந்தபொதுத் தொண்டனென்போன்
நாதி 'யற்றோன் !

அற்றதுபோல் தோன்றுதிங்கு
பேதம் ; மேலே
ஆறிவிட்ட எரிமலைபோல்
உள்ளுக் குள்ளே
பற்றுவதை யாருணர்வார் ?
கண்ணோட் டத்தில்
பார்ப்பதொன்று நடப்பதொன்றாய்க்
காலப் போக்கில்
முற்றுவதை எல்லாரும்
உணர்ந்தும் நாவால்
மூடிவிட்டுச் சீர்திருத்தம்
பேசும் பாங்கு
கற்றதுதான் மிச்சமிந்தச்
சமுதா யத்தில்
காழ்ப்பகற்ற வந்தவர்கள்
தோற்றே யுள்ளார் !

உள்ளாறாச் சாதிமத
வெறிநோக் கோடே
ஊரூராய்ப் பலரிருக்க
அவரைப் பார்த்துத்
தெள்ளாறு காட்டுவதாய்
முனைந்தோர் பேதத்
தீதயினில் தேன்கலந்து
புகட்டி விட்டால்
கள்ளாறு கரையுடைந்து
சமுதா யத்தில்
காட்டாறாய்ப் பாய்ந்துவந்தே
அழிக்கும் ; உண்மைக்
கொள்ளாறு கூறுபவர்
நிறையா நாட்டில்
கோளாறு விளைவதிலே
வியப்பு மேது ?

ஏதுக்கள் வந்தவனை
வளைத்த போதும்
இழிமொழியும் பழிச்சொல்லும்
சேர்ந்து பொய்மை
வாதுக்கள் வென்றுமவன்
தோற்று மன்ற
வழக்குநெறி தாழ்விலங்கு
தந்த போதும்
சூதுக்கள் சாகசமாய்ச்
சூழ்ந்தே இன்பச்
சுகமெல்லாம் அவனின்று
பிரிந்த போதும்
தாதுக்கள் துடிப்படங்கும்
நிலையி லேயும்
தவறாது கொள்கைசொல்வான்
ஊரு ராக !

ஊருராய்ப் பூபாலன்
மேடை யேறி
உயர்கருத்தைத் தினம்பேசிச்
சுற்றி வந்தான் !
யார்யாரோ அறமின்றிப்
பகைத்து நின்றார் ;
யாவரையும் எதிர்நின்று
வென்று கொள்கைச்
சீரோடு வாழ்வமைத்த
அய்யாக் கண்ணு
சென்றபின்னும் தன்வாழ்வில்
தனித்தே அன்னம்
போராடி நிற்பதனை
நினைத்துக் கொள்வான் ;
பொதுவாழ்க்கை இன்னலிலும்
அதுவோர் ஏற்றம் !

ஏற்றமென்ற வாரஇதழ்
ஒன்றில் பாலன்
எழிற்கருத்தைப் பலவிதத்தில்
வடிப்ப துண்டு ;
கூற்றமென்ற பேதங்கள்
சமூகத் திற்குள்
கூடிவிட்ட இழிவுகளை
இதனால் கொஞ்சம்
மாற்றுமென்ற நப்பாசை !
இதழின் ஆசான்
மாதத்தில் அவன்கவிதை
நான்கு கேட்பார் !
சீற்றமுற்றும் ஆற்றாமை
பெற்றும் நாட்டின்
சீர்கேட்டைப் பாவடிவில்
புனைவ துண்டு !

உண்டுண்டு கொழுப்பவரைக்
காய்வான் ! சுற்றும்
ஊதாரி களைக்கண்டு
பரிக சிப்பான் !
பண்டுண்டு என்பதல்ல
இன்றே கண்முன்
பார்ப்பதற்கு உருத்தந்து
யாப்புள் வைத்து
விண்டுரைப்பான் ; அதனைத்தான்
பலர்வா சித்து
விழிப்புணர்ச்சி பெற்றுளதாய்
எழுது வார்கள் ;
தொண்டுக்கே பாப்புனைவான்
என்றால் கூடத்
தொடுப்பதுண்டு சிலசமயம்
காதல் பாட்டு !

பாட்டுத்தான் பலதலைப்பில்
புனைந்த துண்டு
பட்டதில்லை காதலெவ்வா
றிருக்கும் என்றே !
கேட்டதைத்தான் உணர்ந்ததில்லை
கிளியைப் போலக்
கேட்டதனைப் பாவாக
வடிப்பான் ! இந்த
நாட்டுக்குள் காதலொரு
கேடா ? சாதி
நாய்நரிகள் மத்தியிலா
மான்கள் கூட்டம் ?
வீட்டுக்கு வீடுவொரு
வெறியே ! அன்றி
விழைவுள்ள நல்லதிருக்
காதல் ஏது ?

ஏதோதான் அன்றைக்கோர்
காதல் பாட்டை
எழுதிவிட்டான் பூபாலன்
சுவையைக் கூட்டி
மீதமுள்ள சங்கதிகள்
அறியான் ! சும்மா
மேலுக்குக் காதலர்உண்
டாக்கி ஊமை
வாதுக்கள் அவர்களுளே
நிகழச் செய்தே
வந்துதித்தான் செல்வனென்று
புனைந்தான் பின்பு
ஏதுக்கோ தானதனைப்
படித்தான் ! இன்பம்
எழுந்ததுபோ ராடநெஞ்சுள்
தொடர்ந்த தன்றே !

அன்றைக்கே 'ஏற்றம்'இதழ்
ஆசா னுக்கே
அக்கவிதை தனையனுப்ப
வேண்டும் இன்றேல்
இன்றைக்கு நாளைக்காம்
என்னும் சோம்பல்
இழுபறியில் சிக்கிவிடும்
போகா தென்று
குன்றாத ஆசையினால்
எழுத்தை முத்துக்
கோர்த்ததுபோல் படியெடுத்துன்
உறையில் இட்டே
என்றைக்கும் உண்டான
அவச ரத்தில்
எழுந்துசென்றான் அஞ்சலகச்
சமயம் நோக்கி !

நோக்கமெலாம் அஞ்சலுக்குள்
இந்தப் பாட்டு
நுழைந்துவிட வேண்டுமென்ப
தல்ல ; நல்ல
ஆக்கமுள்ள ஓர்செயலுக்
காகக் கூடி
ஆராயத் தன்நண்பர்
குழுவை நாடி
ஏக்கமுடன் ;அவன்சென்றான் !
செல்லும் வீதி
இடப்புறத்து வரிசையுள
கோதை வீட்டை
நோக்கிட்டான் பரிவோடு
வழக்கம் போல
நுண்ணறிவுத் தாய்மகளைக்
காண வில்லை.

இல்லாமல் இல்லையங்கே
உள்வீட் டுக்குள்
இருப்பார்கள் ஏதேனும்
பணியில் என்றும்
சொல்லாமல் போவதவன்
பழக்க மில்லை
சொல்லிவிடை பெறவெளியூர்
கிளம்ப வில்லை
இல்லாமல் அவ்வழியைக்
கடக்கும் அந்த
நிமிடத்தில் தொடுத்தமலர்
மாலை ஒன்று
வில்லாக வளைந்துவந்து
தன்பா தத்தில்
விழுந்ததனைப் பார்த்திட்டான்
சூடா மாலை !

மாலைதனைத் தாண்டுதற்கோ
மிதிப்ப தற்கோ
மனமின்றி எடுத்ததனை
நுகர்ந்தி டாமல்
வேலைகெட்டு யாரிதனைக்
கொய்தார் ? உள்ளம்
விழையாமல் ஏனிதனைச்
சரந்தொ டுத்தார் ?
சாலையிலே விட்டெறிந்து
பலர்கால் பட்டு
சக்கைகளாய்ச் செய்வதற்கோ
பூக்கள் ? பூக்கும்
சோலையிலும் வாழாமல்
கெடுத்துக் கொய்து
சேகரித்தும் கெடுத்தாரே
எனநி னைத்தான் !

தான்பைக்குள் வைத்ததனை
நடந்தான் ! இன்பம்
தருமணத்தைச் சிந்தியதே
உள்ளி ருந்தே
தேன்சிந்தும் மலர்பாலன்
கரமி ருந்து
சிரித்ததன் எழில்கண்டு
நினைத்துக் கொண்டான் :
ஏனிதனை வெறுத்தார்கள் ?
கோதை வீட்டில்
இருந்தன்றோ எறிந்தார்கள் ?
புதுஇப் பூவைத்
தான்சூடா திருந்தாலும்
வெளியில் வீசும்
தையலரை இப்புவியில்
எவரோ பார்த்தார் ?

பார்ப்பதற்குச் சென்றவரைப்
பார்க்கு முன்னே
பக்குவமாய்ப் பாவஞ்சல்
சேர்த்தான் ! ஊரார்
ஆர்ப்பரிப்பு இல்லாத
ஆற்றோ ரத்தில்
அன்றாடம் காற்றாடச்
செல்வ தைப்போல்
ஊர்ப்புறக்கா விரிக்கரையில்
சென்றான் ; விண்ணில்
ஒளிநிலவு தானேறிப்
பொன்னி ஆற்றின்
நீர்ப்பரப்பில் முகம்பார்க்க
வருதல் கண்டான் ;
நினைவிழந்தான் கற்பனைத்தாய்
கவிதை தந்தாள் !

தந்தமதி தன்னழகை
நதியில் பார்க்கத்
தாரகைகள் பொறாமையுடன்
அதனை நோக்க
அந்தரத்தில் உலவிவரும்
மேகக் கூட்டம்
அதுகண்டு சகிக்காமல்
திரையை மாட்ட
தந்திரமாய் நீக்கியதை
நிலவு நங்கை
தமிழ்க்கவிஞன் தனைநோக்கச்
செவிலிப் பொன்னி
கந்தருவ மணம்பற்றிப்
பாடிச் செல்ல
கரையிருந்தான் கரைகாணா
ஆவ லாலே !

# பூங்கோதை

கரைகாண முடியாத
ஆவல் — பருவக்
கரையிலே முறையாகச்
சிறைவைத்தும் காவல்
நிறைபோட்டுப் பார்க்காத
தங்கம் — உண்மை
நீதியில் நேர்மையில்
உருவான அங்கம்
—கரைகாண.............

விழிகளை விளையாட
விடுவாள் — காதல்
வெந்தணற் காட்டிற்குள்
எனைத்தள்ளிச் சுடுவாள்
மொழியுடன் அமுதத்தைத்
தருவாள் — தந்து
முதலுடன் வட்டியும்
சேர்த்துத்தான் பெறுவாள்
—கரைகாண.............

ஊடலில் உவகையைக்
கெடுப்பாள் — எந்தன்
உளநோகு முன்வந்தே
உதட்டின்பம் கொடுப்பாள்
பாடலில் வினைக்கேள்வி
தொடுப்பாள் — நான்
பகருமுன் அவள்நல்ல
பதிலையும் விடுப்பாள்
—கரைகாண.............

உண்ணாமல் உறங்காமல்
இருப்பாள் — உணவை
ஊட்டினால் ஊட்டுவாள்
முன்னுண்ண மறுப்பாள்
பொன்னையும் மணியையும்
வெறுப்பாள் — என்றும்
புன்னகைப் புதுச்சுவை
எண்ணத்தி லிருப்பாள்
—கரைகாண முடியாத
ஆவல்...........

ஆவலொடு இப்பாட்டைப்
பாடிக் கொண்டே
அகத்தொருநாள் தனித்திருந்தாள்
நினைவில் பாலன்
காவலொடு குடியிருந்தான்
அதனால் ராகம்
கனிந்தகனிச் சாறெனவே
தொடர ; கோதை
காவலனாம் அவனெழுதி
ஏட்டில் வந்த
நற்கவிதை இக்கவிதை
இதன்பொ ருள்போல்
காவலனாய்த் தனக்குமவன்
உரிமை நல்கிக்
கைப்பிடிப்பான் என்றேங்கப்
பாடல் செய்தான் !

செய்தாலும் செய்கின்றான்
கவிதை மூலம்
சிந்தனையைத் தூண்டுகின்றான் ;
தணியாக் காதல்
பெய்தாலும் பெய்கின்றான்
பெய்து நெஞ்சைப்
பிழிந்தெடுத்து விடுகின்றான் ;
உணர்வு தன்னைக்
கொய்தாலும் கொய்கின்றான்
கொய்து கொண்டு
குறிப்பறியாக் குழந்தையென
இருந்து கள்ளம்
செய்தாலும் இனிக்கிறதே
எனநி னைத்தாள் ;
சிறுபையன் ஓடிவந்தான்
எதையோ தந்தான் !

தந்ததனை வாங்குதற்கு
மறுத்து, கோதை
தடுமாறு முன்கைக்குள்
திணித்து விட்டு
பந்தாட ஓடிவிட்டான்
சிறுவன்! உள்ளம்
பந்துபடும் பாடாச்சு
இவளுக் கேதான்!
அந்தரங்கச் செய்திதனை
இங்நே ரத்தில்
அனுப்புதற்கு யாருண்டு?
நினைத்துப் பார்த்தாள்!
மந்திரங்கள் ஒன்றனையே
குறிப்ப தைப்போல்
மனமவனை யேசுற்றிச்
சுழன்ற தன்பால்!

அன்பாலே பூபாலன்
தொடர்பு கொள்ள
அழைப்பிதழோ இக்கடிதம்?
கட்டு மீறித்
தன்பாலே ஈர்ப்பதற்கோ?
இல்லை எந்தன்
தாய்மனதை அறிவதற்கு
முன்னேற் பாடோ?
முன்பாலே உளம்திறந்து
காதல் பேச
முடியாமல் தான்மடலாய்
விடுத்த தூதோ?
என்பாலே அவர்கொண்ட
ஈகை யாலே
எழுதியதோ எனமனத்துள்
நினைத்தாள் இன்பம்!

இன்பமய மானமனக்
கோட்டை கட்டி
இருவிழியைக் கதவாக்கித்
திறந்து வைத்தே
அன்புமய மானதுவாய்
இருக்கும் தன்னை
அழகுதமிழ் சொற்றமுழவும்
கடிதம் என்று
புன்னகையில் நாணத்தைக்
கலந்து காணாப்
புதுச்சுகத்தை வரவழைத்துக்
கொண்டு பாலன்
இன்பமட லெனப்பிரிந்துப்
படித்தாள் ! ஐயோ
இம்மடலென் உயிர்கொல்லும்
எமனோ அம்மா !

அம்மாவும் வீட்டிலில்லை
வரும்நே ரம்தான் ;
அதற்குள்ளே பிடித்தபயம்
அவளை ஆட்டச்
சும்மாவே நடுங்கிற்று
கால்கை ; நெஞ்சு
சுடுநெருப்பில் புழுப்போலத்
துடிக்க, மேனி
'கம்'மென்று வியர்த்திற்று ;
வறண்ட நாக்கு
கடுந்தாகம் எடுத்துலரத்
தொண்டை, மூச்சு
விம்மிற்று ; கலங்கிற்று
கண்கள் ! கோதை
விழும்நிலையில் அன்னம்மா
விரைந்து வந்தாள் !

வந்தன்னம் மிரண்டிருந்த
மகளைப் பார்த்து
''வருத்தம்ஏன் ? கண்ணேநீ
பயந்தாற் போல்
குந்தாமல் நிற்பதுமேன் ?
உடம்புக் கென்ன ?
கொதிக்கிறதே ! எனத்தொட்டும்
அணைத்தும் மார்பில்
''இந்தாம்மா தின்பண்டம் !''
என்று கூற
எதிர்வைத்துக் கோதைதலை
வருடும் போழ்து
முந்திவந்த ஆத்திரத்தை
அடக்கத் தன்னால்
முடியாமல் நெஞ்சடைக்க
''அம்...மா !'' என்றாள்.

என்றதனைக் கேட்டவுடன்
பருந்து மேலே
இரைதேடி வட்டமிடப்
பார்த்த கோழி
நின்றிருந்த குஞ்சுதனை
அழைத்துத் தான்தன்
நீள்சிறகுள் அணைப்பதைப்போல்
அணைத்தாள் அன்னம் ;
''நின்றுள்ளேன் உனைச்சுமந்து
பெற்ற நானுன்
நிலைகலங்கப் பார்ப்பதற்கா ?
இவ்வூ ருக்குள்
குன்றெனவே வாழ்ந்தவர்கள்
நாங்கள் ! கண்ணே !
குழப்பமென்ன சொல்லம்மா ?''
என்று கேட்டாள்.

கேட்டதன்தாய் குரலிலுள்ள
உறுதி கேட்டுக்
கிலிபிடித்த மனத்திலுள்ள
கலக்கம் விட்டுக்
காட்டமுடன் பல்லிறுகக்
கடித்து, "அந்தக்
கருங்காலிப் பயல்வேம்பன்
எனக்குக் காதல்
சீட்டெழுதி அனுப்பியுள்ளான்
பார்ம்மா !" என்று
சினத்துடனே கையிருந்த
சிறுதாள் தன்னைக்
காட்டிநின்றாள் ! அடிபட்ட
புலிபோ லன்னம்
கடிதத்தைக் கனல்விழியால்
பார்த்தாள் சீறி !

சீறிவந்த புலியதனை
விரட்டித் தன்கைச்
சிறுமுறத்தால் தமிழச்சி
கொன்றா ளென்று
கூறிவந்த வரலாற்றை
அவள்தாய் கொண்ட
கோபத்தில் கோதைகண்டாள் !
அந்நே ரத்தில்
ஏறிட்டு நோக்கியதீத்
தாவும் கண்முன்
இருந்திருந்தால் வேம்பனதில்
பொசுங்கிச் சாம்பல்
நீறாகிப் போயிருப்பான் ;
வெம்மூச் சின்முன்
நிர்க்கதியாய்த் துடித்ததவள்
விடுத்த ஓலை !

ஓலைகண்ட கடுங்கோபம்
அவளன் னைக்கே
ஒழியவில்லை வெகுநேரம் !
பிறகு வீட்டில்
வேலைகண்ட படிகிடக்கே
என்ப தாலோ
விடிந்துபல காரங்கள்
செய்து ஊரில்
மூலைகண்ட வீடெல்லாம்
அலைந்து சுற்றி
முழுதுவிற்று வரவேண்டு
மெனவோ "வாம்மா
காலைகண்ட தீக்கனவாய்
நினைத்து நாமும்
கருங்காலிப் பயல்செயலை
மறப்போ" மென்றாள்.

"மறப்போம்நாம் மன்னிப்போ
மென்ப, காஞ்சி
மாமேதை கூற்றம்மா !
அதற்கே னிப்போச்
சிறப்பிங்கே கொடுத்துக்கொண்
டிருக்கின் றீர்கள்
செய்தியென்ன ?" எனக்கேட்டு
வழக்கம் போல
குறும்பாகத் தான்சிரித்தே
இருகை கூப்பிக்
கும்பிட்ட படிவந்தான்
பாலன் ! "வாப்பா !
மறந்தாயோ வெகுநாளாய்
இந்தப் பக்கம்
மறந்துவந்து விட்டாயோ ?"
என்றாள் அன்னை !

அன்னையொடு சேர்ந்தவளும்
இந்தப் பாதை
அடியோடு மறந்திருக்கும்
போலு மென்று
முன்னையொரு நாற்காலி
இழுத்துப் போட்டு
முகமலர அதிலமர
விழைந்தா ளப்போ.
''சென்னையிலே ஓர்கவிதை
அரங்காம் ஆங்கு
சிரிப்பென்னும் தலைப்பிலொரு
கவிதை பாட
என்னையுந்தான் அழைத்துளனர்
சொல்லிப் போக
இங்குவந்தே'' னென்றான்புன்
னகைத்துக் கொண்டே !

''கொண்டாட்டந் தானுனக்கு
வெளியூர் சுற்றக்
கொடுத்துவைத்த பிள்ளையென்றே
அம்மா சொன்னாள் ;
கொண்டாறேன் மோரென்று''
உள்ளே சென்றாள்.
குணக்குன்றின் வாய்கிளறச்
சமயம் பார்த்து
''வண்டாகப் பறக்கின்றீர்
கவிதை பாட
வகையறியா ரென்செய்வோம்''
என்றே கொஞ்சம்
கிண்டலுடன் தன்சொல்லை
முடித்தாள் ; அன்னம்
கிளிமூக்குக் குவளையில்மோர்
கொணர்ந்து வைத்தாள் !

கொணர்ந்துவைத்த மோரருந்த
மறந்தோ, நெஞ்சுள்
குமைகின்ற என்வருத்த
மறிந்தோ, ஏதோ
உணர்ந்தவர்போல் பேசாமல்
சற்று நேரம்
உட்கார்ந்து சிந்தித்தார் !
அம்மா பார்த்து''ஓர்
கணங்கூடப் பேசாதி
ருக்காய் ! கப்பல்
கவிழ்ந்ததுபோல் உனக்குமென்ன
கவலை ?'' என்று
குணமாகக் கேட்பதுபோல்
கேட்டாள் ; கேட்ட
குரலுமொரு சோகமுள
தெனச்சொல் லிற்றே !

''சொல்லாமல் என்னிடத்தில்
எதையோ நீங்கள்
சூசகமாய் மறைப்பதற்கு
முயல்கின் றீர்கள் !
அல்லாமல் வேறொன்று
மில்லை, என்னை
அன்னியனாய் எண்ணியகா
ரணத்தால்'' என்றான் !
''இல்லாமல் எதைச்சொல்ல
பாலு ?'' என்றே
இழுத்தாற்போல் பதிலுரைத்தாள்
அம்மா ; ''சற்றும்
நில்லாமல் சுற்றுகின்ற
உலகின் வாழ்வில்
நிம்மதியும் சஞ்சலமும்
வந்தே தீரும் !

தீராத தென்பதொன்று
மில்லை; ஏழ்மை
தீர்க்காமல் விட்டதெனில்
நிறைய உண்டு !
யாராயி னும்சரியே
பேச்சோ டன்றி
யான்துருவிப் பார்ப்பதவர்
மனத்தை ! மேலே
சீராக இருப்பதுபோல்
பேசி னாலும்
தெரிந்துவிடு கின்றதம்மா
உள்ளம் ! ஒன்றும்
நேராத தாய்நீங்கள்
கூற நேர்ந்த
நிலையென்ன ?'' அவன்கேட்க
அன்னம் சொன்னாள்.

சொன்னதொரு பச்சைப்பொய்
தொடர்பில் லாமல்
சொல்வதுஏன் ? எனக்கோதை
புரியா மல்தன்
கன்னத்தில் கைபதித்துச்
சுவரில் சாய்ந்து
களிப்பின்றி உட்கார்ந்தாள் ;
அவனோ மீண்டும்
''என்னஇது பூசலுங்கள்
இருவ ருள்ளா ?
யான்நம்ப முடியாதே !''
என்று தானாய்
புன்னகைத்துப் பலகதைகள்
சுவையாய்ப் பேசிப்
புறப்பட்டான் அவளிருக்க
உயிரைக் கொண்டே !

''கொண்டுவந்துன் எதிர்வைத்த
மோரைக் கூடக்
குடிக்காமல் ஏன்பாலு ?
குடித்துச் சற்றே
திண்டின்மேல் சாய்ந்திருவேன்;
உலையை மூட்டிச்
சீக்கிரத்தில் சமைக்கின்றேன் !
உண்டு சென்னை
வண்டிக்குப் போய்விடலாம்''
என்றாள் அம்மா !
வைத்திருந்த மோரையவன்
பருகப் போதல்
கண்டவுட னேதடுத்தாள்
கோதை ! ''மோரும்
கைத்திருக்கும் அதனாலே
அருந்தா தீர்கள் !''

அருந்துதற்கே அவன்கரத்தில்
எடுத்த மோரை
அம்மாவும் வாங்கிப்போய்க்
கொட்டு முன்னே
''பருகாத துன்தவறே
பாலு !'' என்றாள் ;
''பருகிவிடு ஈயமில்லாக்
குவளை என்று
தரும்போதே என்கையில்
தராத தாலே
தவறுஇரு வர்பங்கே''
என்றான் ; ''குற்றம்
நிறுவுவதில் சமத்''தென்றாள்
சிரிப்பி னூடே
நில்லாமல் சமைப்பதற்கு
விரைந்தாள் அம்மா !

"அம்மாவிற் குத்துணையாய்
நான்போய்க் கூட
அடுப்படியில் உதவிசெய்ய
மறந்தேன்! கண்ணால்
இம்மாதம் பூராவும்
அவரைக் காணேன்;
இன்றேனும் யான்காண
வாய்ப்பாய் வந்த
எம்மானின் அன்புமுகம்
சுவைக்க அன்பு
இருக்குமிடத் தேயிருந்தேன்;
இதுபோல் என்றும்
சும்மாவே அவரருகில்
நின்றால் வேறு
சுகந்தேவை யில்லையின்பம்
இதுவே போதும்!"

போதுமெனும் மௌனத்தைக்
கலைத்தாற் போல,
"புதிதாக ஏதேனும்
செய்தி உண்டேல்
காதுமனம் மெய்குளிர
ரசித்துக் கேட்கக்
காத்துள்ளேன் சொல்கோதை!"
என்றான். கோதை
"தூதுவந்த தீமடலைச்
சொலவோ? உம்மைத்
தொடமுடியா என்தவிப்பைச்
சொலவோ? மண்ணில்
மாதுவென ஏன்பிறந்தேன்?
என்றே எண்ணி
மறைத்துவிட்டு நீங்கள்தான்
சொலுங்கள்" என்றாள்.

என்றதுமே அவன்சொன்னான் :
 ''மறந்தே போனேன்
இயல்பாக அவசரமாய்
 இந்தப் பாதை
அன்றொருநாள் நான்போனேன்
 அங்கே ரத்தில்
அரும்புப்பூச் சரமொன்றென்
 காலில் வீழ
நின்றதனை யானெடுத்துப்
 பார்த்தேன் ! உண்மை
நிச்சயமாய் அதுயாரும்
 சூடா மாலை
என்றுணர்ந்தேன் அதைச்சுருட்டிக்
 கைப்பை வைத்தேன்
'இது அதுதான் ! எதிர்வைத்தான்
 ''ஏதி தென்றே''

ஏதிதென்று எதிர்வைத்த
 கருகிப் போன
''இந்தப்பூ யான்கொய்து
 தொடுத்தேன் ! சூடின்
தீதென்று வீசவில்லை !
 மணமுள் ளத்தைத்
திசைமாற்று மென்றல்ல ;
 சூடிக் கொண்டால்
நாதியொன்றும் ரசிக்கவில்லை ;
 எறிந்தேன் ! தாங்கள்
நானொன்று வருமுண்மை
 உணரேன் ! இந்தத்
தேதி''யென்று கூறிடநா
 எடுத்தாள் ! வாய்க்குள்
திக்கியது பேசாமல்
 உதித்தாள் கண்ணீர் !

# வேம்பையன்

''கண்ணீரும் என்செய்யும் ?
கலங்கக் கண்டு
கலங்குவது வீரனுக்கோ
அழகா காதே ;
உண்ணீராம் பூங்கோதை !
எனக்குத் தாகம்
உரிமையுடன் பருகுதற்கே
உகந்தா என்றோ ?
மண்ணீரில் கலக்கிறது ;
கலந்து விட்டால்
மறுசுரப்பில் தீர்க்கிறது
தாகம் ! கெட்ட
தண்ணீராய் மண்ணோடு
கலந்த அத்தை
தருகின்றாள் கோதையெனும்
இளநீ ராக !

ஆகஅதை நான்பருகித்
தீர்க்க நூறு
ஆயிரந்தான் வருமெனினும்
வரட்டும் !'' என்று
போகவரப் பார்க்கின்றான் ;
பெயருக் கேற்றாள்
பூவிதழில் புன்னகைநன்
முத்துப் பற்கள் !
மோகவுணர் வேற்றிடுமாங்
கனியோ கொங்கை !
மொய்குழலோ கார்மேகம் !
அந்தி வெய்யோன்
ஏகுகையில் பொன்னிறத்தை
வானில் வீசும்
இன்பவெறி நிறமவளின்
அழகு மேனி !

மேனியென்றோ அவளுடலைச்
சொன்னேன் ? தப்பு !
மேதினியை மயக்கவந்த
காந்தப் பாவை !
ஞானியென்று கானகத்தில்
தவத்தில் மூழ்கி
ஞாலத்தை மறந்தவனும்
அவளைக் கண்டால்
ஈனியென்று பெயரெடுப்பான் !
வெறியன் ஆவான் ;
இன்பமவ ளேயென்பான் ;
கோடி செய்தும்
நானின்றே அவ்வின்பம்
சுவைப்பேன் என்பான் ;
நான்மட்டும விடுவேனா
அழகு காக்க ?

காக்கின்றாள் அத்தையுந்தேன்
கூடாய் காத்துக்
கரந்தருவா ளாஎனக்கே ?
அன்றி என்னை
நீக்குகின்றாள் என்றால்யான்
விடவோ ? நீதான்
நிகரில்லாப் பூங்கோதை
காமப் பொய்கை
பூக்கின்றாள் பொன்வயிர
நகையாய் அன்றே
புகழ்கின்ற அழகோடு
அழகை நாளும்
நோக்குகின்றாள் எனஊரார்
மெச்ச வைப்பேன் !
நோக்கம்சொல் லென்றுமடல்
தொடுத்தி ருந்தான் !

தொடுத்தமடல் கொண்டுசெல்ல
ஆளில் லாமல்
துக்கிக்கும் நிலைமையிலே
ரமாவைக் கண்டே,
''அடுத்தவரும் தாம்விலகிச்,
செல்லா வண்ணம்
அழகுவலை வீசுகின்ற
பாவாய் ! வேட்கை
விடுகதைக்கும் உட்பொருளே !
மயக்கம் நீங்கா
வேகமதுள் ளிருக்கின்ற
சொம்பே ! இன்பம்
கொடுத்தபடி யேயிருப்பேன்
செய்க ! என்றான்
குறியிதென்று மடல்காட்டிச்
சரியா ?'' என்றான் !

''சரியென்றோ நான்சொல்வேன் ?
வேம்புன் ஆசைத்
தவிப்பதனை உணர்கின்றேன் !
அப்பூங் கோதை
சரியாக என்னிடத்தில்
பேசாள் ! முன்பு
சரிசெய்தார் நிலைமையெலாம்
வேறு ! பார்த்தே
உரியவழி சொல்லுகின்றேன் ;
ஆனால் 'உன்னை
ஒருபோதும் மறந்துவிட
மாட்டேன்' என்றே
எரியுமகல் விளக்கணைத்தே
ஆணை தந்தால்
இயன்றவரை முயல்கின்றேன்''
என்றாள் ; கேட்டும்,

கேட்காமல் நின்றிருந்தான்
'சரியா ?' என்றாள் ;
"கேட்டதுனைச் சரியில்லை !"
என்றான் ; சொல்லில்
சூட்சமங்கள் ஏனெ"ன்றாள் ;
"அதுஇல் லாமல்
சுகங்காண வழியில்லை"
என்றான் ; "ஊரில்
ஆட்களின்றிப் போனதுபோல்
தவிப்பேன் ?" என்றாள் ;
"அவளுக்கு மற்றார்கால்
தூசி!" என்றான் ;
"கேட்கின்ற என்னையுமா ?"
என்றாள் ; "மீண்டும்
கேட்காதே அதுபற்றி ;"
என்றான் ; சென்றான் !

செல்லுகின்ற மாலையிலே
வழியில் உள்ள
சிறுதிடலில் விளையாடும்
சிறுவ ருள்ளே
சொல்லுவதைக் கேட்பவனாய்
சுறுசு றுப்பாய்ச்
சொன்னவுடன் செய்பவனாய்
அழைத்து, "ராசா !
வெல்லப்பா கால்செய்தும்
ஈக்கள் மொய்த்தும்
வீதியிலே விற்பதுபோ
லன்றி, தூய
நல்லஉயர் சுவைமிகுந்த
மிட்டாய் வாங்கி
நான்தருவேன் ! கேளி"தென்று
கடிதம் தந்து,

தந்திரமாய் அவனிடத்தில்
எடுத்துச் சொல்லி,
'தந்துடன்வா கோதையிடம்'
என்றான் ! காலால்
உந்திவிட்ட பந்தெனவே
சிறுவ னோடி
ஓர்நொடியில் கொடுவிட்டுத்
திரும்பித் தன்பால்
வந்தவனைப் பாராட்டி
இனிப்பு வாங்கி
வழங்கிவிட்டு கோதையதைப்
படிக்கக் காண
அந்தஇடத் தேநின்று
தெரிந்து கொண்டான் ;
அவளவனைக் காணவில்லை ;
வந்தாள் அத்தை !

அத்தைக்கு மடற்செய்தி
தெரிந்தி ருந்தால்
ஆர்ப்பாட்டம் மிகநடக்கும் ;
தெரியா வண்ணம்
முத்தைத்தன் னோட்டுக்குள்
மறைத்து நீரில்
மூழ்குநத்தை போல்கோதை
மறைத்தால் அன்னோன்
சித்தத்தைப் புரிந்தவளாய்
ஆவாள் ; அந்தச்
சிங்காரி மனநிலையும்
தெரியும் என்று
நித்தமவன் எதிர்பார்த்தான் !
கடலி லிட்ட
நிலைக்கல்லாய் இருந்ததந்த
மடலின் செய்தி !

செய்தியறி யாயோநீ
வேம்பு ? நெஞ்சில்
தித்திக்கும் பாவொன்றை
'ஏற்றம்' ஏட்டில்
நெய்துள்ளான் பூபாலன்
என்றோர் நண்பன்
நீபாரென் றானவனின்
படமும் சேர்த்துத்
தைத்திங்கள் மலரொன்றில்
போட்டி ருந்த
தரமதனைத் தான்பார்த்தான்
எரிச்ச லோடு
கையிலதைத் தீண்டாமல் ;
பொருள்பி ரித்துக்
காட்டியதைப் படிக்கின்றேன்
நீவா வென்றான்.

"வாவென் றழைக்கவில்லை
வந்துவிட்டாய் ! வேல்விழியைத்
தாவென்று கேட்கவில்லைத்
தானாய்நீ — பாவினுள்ளே
ஏனோ நுழைந்தாய் ?
இயம்பாமல் எட்டநின்று
மானாய் மருளுவதோ
மாண்பு ?

மாண்பே ! மலரழகே !
மாணிக்கப் பெட்டகமே !
ஆண்வாடை பட்டறியா
அற்புதமே ! — மாண்புற்றுக்
காணுபுவிக் காட்சியெலாம்
கற்பனையில் நாம்சேர்ந்து
காணப் படைத்ததுதான்
கண் !

கண்ணோடு கண்தழுவக்
காந்தம் இரும்பதுபோல்
உன்னோடு மெய்தழுவ
ஒப்பாயோ ? — பெண்ணேநீ
தென்னாடு போற்றுந்
திருப்பாடல் யான்தரவா !
என்னோடு பாட

இணைந்து !
இணையுமெனில் காதல் !
இலையெனிலோ சாதல் !
துணையுமெனில் வாழ்நாட்ச்
சுகமாம் — மனையுமெனில்
கூடாமல் யாண்டு
குலம்விளங்கும் ? எங்கேனும்
பாடாமல் கேட்டதுண்டா
பண் ?

பண்ணென்ன ? பொன்னென்ன ?
பட்டென்ன ? பாவென்ன ?
என்னென்ன சேர்ந்தென்ன ?
என்றனுக்கே — கண்ணன்ன
நீயின்றி நானேது ?
நிலமின்றி நீரேது ?
ஆவின்றிப் பாலே
தறி ?

அறிவே ! திருவே !
அழகே ! புகழே !
நெறியே ! செறிவே !
நிதியே ! — பரிவே !
உயிருள் ளுயிரே !
ஒன்றுள் ளிரண்டே !
பயிருக்கு நீர்தேவை
பார் !

பார்த்தால் பயிர்விளையாப்
பாடுபட்டா லேவிளையும்
சேர்த்தால் கழிக்காதே
சீக்கிரமே — மூர்த்தக்கால்
நட்டாலே பாதிநலம் ;
நாண்பூட்டி யுன்கரத்தைத்
தொட்டாலே தீருமனத்
தொல்லை !

தொல்லை தனையழித்தாய்
துள்ளிடையை யான்தழுவ
எல்லை இலாஇன்பம்
எந்நாளும் — அல்லலற்ற
பள்ளியறைக் குள்ளேனோ
பண்பாடு ? நாணோதே !
தெள்ளமுதே உன்னதரம்
தேன் !

தேனாய் உயர்தமிழாய்த்
தெம்மாங்குப் பண்ணொலியாய்
ஊனாய் உயிராய்
உணர்வதுமாய் — நீநானாய்
நானீயாய் ஆனதனால்
நம்மழலைச் செல்வனைநாம்
காணிக்கை யாய்வளர்ப்போம்
கண் !

கண்ணன்ன செல்வனுந்தான்
கால்நடக்கக் கற்றதுமே
என்னென்ன செய்கின்றான்
ஏஅப்பா ! — அன்னம்போல்
இல்லுள் தவழ்கின்றான்
ஏஊவென் றார்க்கின்றான்
எல்லாம்பே ரின்பநிறை
வே !

வேல்விழியும் நானும்
விளையாட எத்தனித்தால்
பால்கேட்டுத் தானெழுவான்
பாதியில் — வேல்விழியும்
நூலெடுத்து என்கை
நுழைப்பாளே நாணிப்பின்
நாளெல்லாம் முப்பாலுள்
நான் !''

''நான்கேட்க ! அவன்படிக்கப்
பாக்க ளூடே
நளிமிளிரும் சுவைப்பொருளை
விளக்கிச் சொல்லத்
தேன்கேட்க ! என்றதனை
ரசிக்க எண்ணிச்
சிந்தனையைத் திருப்புங்கால்
படித்த நண்பன்''
''ஏன்கேட்க நேர்ந்ததென்று
நினையா தேநீ
இப்பாவின் கருக்கண்டு
கொள்வாய் !'' என்னத்
தான்விழித்தான் அவன்சிரித்தான் !
வேம்பன் நெஞ்சம்
தத்தளித்த துட்பொருளும்
விளங்கக் கண்டு.

''கண்டுகொண்டேன் பாவிலுள்ள
கருத்தை ! பாலன்
கற்பனைக்குப் பூங்கோதை
கருவோ ? முன்பே
உண்டுகொண்ட அனுபவத்தின்
ரசமோ ? ஓகோ !
உள்ளத்தைக் கவரஇது
முன்னேற் பாடோ ?
மொண்டுமொண்டு கிண்ணத்தில்
மதுவைத் தாற்போல்
முறைப்படுத்தி வைத்துள்ளான்
காம வேட்கை
விண்டுள்ள பாடலிதோ?
ஒன்று சேர
விடுவேனா ? நேரிலின்றே
செல்லு கின்றேன் !''

சென்றுகொண்டே இருந்தானத்
    தெருவுக் குள்ளே !
செய்வதறி யாதலையும்
    மனதிற் குள்ளே
ஒன்றொன்றாய் எழுந்தெழுந்து
    கரையை நோக்கி
ஓடுகின்ற கடலலைபோல்
    கோதை ஆசை
என்றென்றோ அவளழகைப்
    பார்த்தே இன்ப
ஏக்கமொடு ரகசியமாய்
    ரசித்த தெல்லாம்
இன்றுவர அவன்நினைவில்
    அந்த வேட்கை
இரட்டித்தே அவனுணர்வில்
    வெறியேற் றிற்றே !

வெறியேறிப் பசியெடுத்த
    ஓநா யானான்
வேம்பய்யன் நிலங்கிளறும்
    கோழிக் குஞ்சைக்
குறிமாறிப் போகாமல்
    பாய்ந்து பற்றும்
கொல்பருந்து போலானான் !
    மதத்த யானை
தறிமீறிச் சங்கிலியை
    அறுத்துக் கொண்டு
தாவுகின்ற நிலையானான்
    பாவி ! கற்பு
நெறிமீறாப் பூங்கோதை
    வீட்டை நோக்கி
நீள்பழியைச் செய்வதற்கு
    விரைகின் றானே !

விரைகின்ற வேம்பனும்தான்
மணியைப் பார்த்தான் ;
விரைவெய்யோன் உச்சிநின்றே
ஒன்றே என்று
விரைகின்ற எரிச்சலுடன்
சுட்ட, அத்தை
வெளியேதான் சென்றிருப்பாள்
இந்த நேரம் ;
கரைகின்ற பாகாகக்
கோதை வீட்டில்
கட்டாயம் தனித்திருப்பாள்
என்றே ஆசை
உறைகின்ற உளம்நிறைந்து
பாறை யாக
உத்வேகம் பெற்றவனாய்
ஓடி னானே !

ஓடிக்கொண் டேயிருக்கும்
காலப் போக்கில்
ஓடிக்கொண் டேயிருக்கும்
உலகில் பாவம்
தேடிக்கொண் டேயிருக்கும்
மனிதக் கூட்டம்
தேடிக்கொண் டேயிருக்கும்
சமயம் பார்த்து
நாடிக்கொண் டேயிருந்தாள்
உள்ளத்தால் பாலன்
நாடித்தன் னிடம்வருநாள்
தேடிக் கொண்டே
தேடிக்கொண் டேயிருந்தாள்
அகத்தில் ! ஏதும்
தேடாது வருமென்று
தெரியாக் கோதை !

கோதையெனும் பூவுடலாள்
குளித்து மூழ்கிக்
குலுங்கிடுபொன் னழகுடலில்
உடுத்தி வெண்மை
பாதைவழிக் கூடத்தில்
தூண்ப தித்த
பாங்குநிலைக் கண்ணாடி
முன்னால் நின்று
போதைவிழித் தன்னழகைத்
தானே கண்டு
பூரித்துப் பூபாலன்
நினைவில் தோய்ந்து
காதணியை எடுத்தணிந்து
பொட்டும் இட்டு
கயல்விழிக்கு மைதீட்டி
ரசித்து நின்றாள் !

நின்றபடி யேநின்று
நீள்மூச் சால்தான்
நெஞ்சிலிரு குன்றசைய
ஆடி முன்னே
நின்றபடி யேநின்றாள்
தென்றல் வந்து
நீழ்குழலைக் கோதிற்றே ;
அதனை அள்ளிக்
குன்றாடும் மேகத்தை
மற்றோர் பக்கம்
கூட்டிவைத்த தைப்போன்று
முன்னால் போட்டாள் ;
மன்றாடி அவள்பாதம்
தொட்டுக் கூந்தல்
மகிழ்ந்ததைப் பார்த்துள்ளே
மகிழ்ந்து கொண்டாள்.

கொண்டஅவள் பூரிப்பைக்
கலைத்துக் கொள்ளக்
கூடாதே என்றாசை
மிகுந்து மீண்டும்
கெண்டைவிழிக் கண்ணாடி
நோக்கப் பின்னால்
கெடுபுத்தி வேம்பையன்
நிற்கச் சேர்த்துக்
கண்டவிழி மிரண்டதுகாண் !
ஆனால் நெஞ்சு
கலங்காமல் வெகுண்டவளாய்த்
திரும்பிப் பார்த்து
விண்டதவள் நெருப்புவிழி
யோடு நாவும்
விரட்டிற்று, "போய்விடுநீ !
இங்கேன் வந்தாய் ?"

"ஏன்வந்தேன் தெரியாதா ?
கடிதம் மூலம்
எழுதியதைப் படிக்கலையா ?
வீணே மீண்டும்
நான்வந்த காரணத்தை
விளக்கிக் கொண்டு
நாழிகையைக் கழிப்பதற்கு
விரும்ப வில்லை ;
மான்தந்த விழிபெற்ற
கோதாய் ! வா !என்
மடியமர்ந்து தோள்பற்றிக்
கேள்நீ இன்பத்
தேன்தந்த மொழியாலே"
என்றான் வேம்பன்
சீற்றமிகு புலியானாள்
கோதை அங்கே !

அங்குவந்து துணைசெய்ய
எவரும் இல்லை !
அலறித்தான் தனிகுடிலில்
பயனு மென்ன ?
தங்குதடை இல்லாமல்
சுற்று முற்றும்
தான்பார்த்தாள் கிடைத்ததொரு
விளக்கு மாறு ;
மங்கைகொரு பெண்வேங்கை
யானாள் பற்றி
மடையன்மேல் வீசிரத்தம்
குடிக்கப் பாய்ந்தாள் ;
வெங்கலக்க டைக்குள்ளே
யானை சென்றால்
வெளிக்கிளம்பும் ஓசையெனச்
சிரித்தான் வேம்பன்.



# கவியரங்கு

அவள்சிரிப்பு என்றனுக்குத்
தலைப்புத் தந்து
அவையேறிக் கவிபாட
அழைத்தோர் ! இங்கே
எவள்சிரிப்பை நீகவிதை
யாத்துப் பாட
இருக்கின்றாய் எனக்கேட்கத்
துடிப்போர் ! முன்பு
அவரவரும் உயர்தலைப்பில்
பாக்கள் தந்தே
அமைத்துள்ள அருங்கவிஞர் !
தலைவர் ! மக்கள்
எவருமிவண் நீக்கமற
வணக்கம் ஏற்றே
இளையோன்பாச் செவிமடுக்க
வேண்டு கின்றேன் !

விண்ணளவு புகழெய்த
ஆன்றோ ரெல்லாம்
விழைத்தார்கள் நல்லுள்ளச்
சிரிப்பை ; இந்த
மண்ணுலகில் உய்யுமுயிர்
இனங்க ளுள்ளே
மானிடர்க்குத் தான்சொந்தம்
சிரிப்பு ; அன்பு
எண்ணமுளோர் நகைகாணில்
நோய்போம் என்றார்
எனக்கதுதான் கிட்டவில்லை ;
இயற்கை அன்னை
வண்ணமிகு காட்சிகளாய்ச்
சிரித்தாள் ! கண்டேன்
வடிக்கின்றேன் யான்காணாச்
சிரிப்பை இங்கே !

புதுப்பானை சிரிக்கிறது
    பொங்கல் நாளில்
புகழ்மாலை சிரிக்கிறது
    பாராட்ட டன்று ;
மதுக்கோப்பை சிரிக்கிறதே
    அருந்தும் வேளை ;
மடல்விட்டுச் சிரிக்கிறது
    காட்டுத் தாழை ;
சுதிகெட்டும் சிரிக்குதிசைக்
    கருவி ; மானச்
சொணையற்றும் சிரிக்கின்றார்
    பல்லோர் நாட்டில் ;
எதுகண்டோ சிரிக்கிறது
    கவிஞர் உள்ளம் ;
எனக்குரியாள் அவள்சிரிப்பை
    ஏனோ காணேன் !

மலர்விரிந்து சிரிக்கிறது
    கவர்ச்சி தேக்கி ;
மணம்கலந்து சிரிக்கிறது
    தென்றல் ; கோயில்
அலர்தூவிச் சிரிக்கிறது
    பூசை வேளை ;
அழுதழுது சிரிக்கிறதே
    உலகம் ; காலை
சிலரெழுவர் சிரித்திடுவர்
    கவலை யற்றோர் ;
சிலையுடைந்தும் சிரிக்கிறது
    பழிக்கும் போழ்து ;
பலர்சிரிக்க இவ்வவனி
    மகிழக் காதல்
பசியுணர்ந்த அவள்சிரிப்பை
    ஏனோ காணேன் !

நிலையான வாழ்வில்லா
மாந்தர் கட்கோ
நிதநிதமும் பலசிரிப்பு ;
அதிலே ஒன்று
விலைவாசி ஏற்றத்தின்
சிரிப்பு ; நாட்டின்
வெறுஞ்சிரிப்பு மிகுகிறதே,
'ஐயோ ! துன்பம்
தொலையாதோ' என்றிருக்கும்
வேளை பார்த்துத்
துளைக்கின்ற நோய் நொடிகள்
எளியோர் முன்னே
மலையாகப் பிரச்சினைகள்
சிரிக்கக் கண்டேன்
மனங்கலந்தாள் அவள்சிரிப்பை
ஏனோ காணேன் !

வெண்ணிலவு சிரிக்கிறது
முழுமை பெற்று ;
விடிவெள்ளி சிரிப்பதுவோ
சற்று நேரம் ;
நன்னிலங்கள் சிரிக்கிறது
விளைவைத் தேக்கி ;
நதிகளெலாம் சிரிக்கிறது
கடலில் சேர்ந்து ;
பொன்னகைகள் சிரிக்கிறது
பெண்கள் மேனி
பூத்தமலர் போற்குலுங்கும்
வேளை தன்னில்
என்னென்ன வோசிரிக்கப்
பார்த்தி டும்யான்
எழில்முகத்தில் அவள்சிரிப்பை
ஏனோ காணேன் !

பற்றற்ற துறவிகளின்
சிரிப்புக் கண்டேன் ;
பதவிவெறி கொண்டோரும்
சிரிக்கப் பார்த்தேன் ;
முற்றாத இளஞ்சிரிப்பைக்
கண்டு நானும்
முறுவலித்த துண்டுபல
சமயம் ; ஆழ்ந்து
பெற்றகல்வி இலையெனினும்
பணமுண் டென்றால்
பெரும்புகழ்ச்சி கற்றவர்கள்
செய்ய, ஞானம்
வற்றியதால் சிரிப்பார்கள்
காண்பேன் ; ஆனால்
வடிவழகி அவள்சிரிப்பை
ஏனோ காணேன் !

தரங்கெட்ட இளைஞர்பலர்
வீதி யோரம்
தையலரைக் கேலிசெய்து
சிரிக்கின் றார்கள் ;
தெருக்கதவைத் திறந்துவைத்து
வருகை கண்டு
சிரிக்கின்ற பெண்களுண்டாம்,
பார்த்த தில்லை ;
இருக்குமிடம் மிகக்குறைவு
என்ப தாலே
எங்கெங்கோ சிரிக்கின்றார்
காதல் கொள்வோர் ;
மறத்தமிழன் யான்கவிதை
செய்ய என்றன்
மனமறிந்த அவள்ஏனோ
சிரிக்க வில்லை !

பேரமதைப் பேசுமுன்னே
குழைந்து லாபம்
பெற்றபின்னே சிரிக்கின்றான்
வணிகன் ; பன்னாள்
காரணங்கள் ஏதுமின்றி
வீதி தன்னில்
கணக்கின்றிச் சிரிக்கிறது
மனிதர் கூட்டம்
தோரணங்கள் பலகட்டி
மேடை இட்டுத்
தொகைதொகையாய் வீண்கதைகள்
பேசிப் பேசிச்
சீரழிந்த வாய்மொழியால்
பலரை ஏசிச்
சிரிக்கின்றார் ! அவள்சிரிப்பே
அற்றுப் போச்சோ !

அலைகடலும் சிரிக்கிறது ;
கதிரோன் குந்தும்
அடிவானம் சிரிக்கிறது ;
நெஞ்சை யள்ளும்
மலையருவி சிரிக்கிறது,
இயற்கை அன்னை
மடிதனிலே குதிக்கிறது ;
என்ன நேர்த்தி !
விலைமதியாச் சிற்பங்கள்
படைத்த ழித்து
விளையாடிச் சிரிக்கிறது
மேகம் ! இந்தக்
கலையழகு தனைக்கூட்டி
ஒருங்கே சேர்த்துக்
கவிபுனைய அவள்சிரிப்பால்
உதவக் கேட்டேன் !

என்னருமைக் காதலியோ
தமிழாம் ! ஊடல்
எனக்களித்துக் களிப்பவளாம்
வாழ்க ! இங்கே
தன்னருமை பெருமைகளைச்
சொல்லித் தக்க
தருணத்தில் சிரிப்பாளாம் !
அன்றே 'போற்றும்
நின்னருமை பேசிடுவேன்'
என்று கூறி
நீங்குகிறேன் இங்கிருந்து ;
கவிதை கேட்டார்
தன்னருமை நேரத்தை
வீணாக் காமல்
தலைவணங்கி முடிக்கின்றேன் !
நலமே சூழ்க !



# அன்னம்மா

"சூழ்கநலம் பூபாலன்
கரங்கள் பற்றித்
தொல்புகழும் பல்சீரும்
நிறையப் பெற்று
வாழ்கநலம் நான்பெற்ற
செல்வி கோதை
வாழ்வாங்கு வையகத்தில்
வாழ்க !" என்று
ஆழ்கநலச் சிந்தனையில்
ஆழ்ந்த அன்னம்
அவசரமாய் வருகின்றாள்
வீடு நோக்கி ;
சூழ்கநல எண்ணங்கள்
இருவர் நெஞ்சுள்
'தோன்றும்நாள் எந்நாளோ !'
என்றே ஏங்கி.

ஏங்கியது கோதையவள்
தாயின் உள்ளம் !
எந்தத்தாய் ஆயினுமிவ்
வேக்கம் உண்டே !
நீங்கியது கவலையென
இருக்க எண்ணி
நீங்காத கவலையுறும்
தாய்மை மட்டும் ;
தூங்கியது பூபாலன்
இளமை உள்ளம் ;
தொடர்கின்ற காதல்கோய்
அவனைப் பற்ற
ஏங்கியது என்றாலும்
உறுதி பெற்றே
ஏற்றமிலாப் பொதுத்தொண்டுக்
குழைக்கின் றானே !

உழைத்துழைத்து நொந்தவுடல்
நினைத்தி ருந்தால்
உப்பரிகை மஞ்சத்தில்
திளைக்கும் மேனி
பிழைத்துவிட்டால் போதுமென
எண்ணா மானம்
பெரிதென்றே அலைந்தாப்பம்
விற்று விட்டுக்
களைத்தலுப்புத் தாளாமல்
வீட்டுக் கேகும்
கற்பரசி அன்னம்மாள்
நெஞ்சில் என்றோ
முளைத்துவிட்ட உறுதியினால்
வாழ்ந்து காட்ட
முடிவில்லாக் கவலையொடு
வருகின் றாளே !

வருகின்றாள் பலர்பசிக்கும்
ஆப்பம் தந்தும்
வருத்திற்றுப் பசியவனை ;
வீட்டில் கோதை
இருக்கின்றாள் தனியாக
என்ற எண்ணம்
இடையிடையே நெஞ்சுக்குள்
தீயாய்ப் பற்றி
எரிக்கின்ற துடிப்போடு
நடையில் வேகம்
ஏறிற்றவ் வன்னம்மாள்
சிறகில் லாமல்
பறக்கின்றாள் தன்மேனி
குடிகொண் டுள்ள
பாழ்முதுமை யோடுகடும்
போட்டி போட்டு !

போட்டிருந்த மேல்துணியும்
பறக்கப் பாதை
போக்குவரத் தானவர்கள்
ஒதுங்க ! ஆப்பம்
போட்டிருந்த பாத்திரங்கள்
கூடைக் குள்ளே
போகின்ற அவசரத்திற்
கேற்றாற் போலக்
கூட்டுகின்ற ஒலிதொடர
வியர்வை முத்துக்
கோலமிடக் கோடுபெற்ற
நெற்றி ஏறிக்
காட்டுகின்ற வேகத்தில்
வீடும் சற்றுக்
கடுகிஎதிர் வந்ததுபோல்
தோன்றிற் றங்கே !

அங்கந்தக் குடில்கூட
வாயில் வந்தே
அம்மாளின் வருகைதனை
வழக்க மாகப்
பொங்குகிற ஆவலொடு
பார்த்து நின்று
பொன்ரதம்போல் எதிர்வந்து
சுமையை வாங்கும்
தங்கம்நிகர் மகள்முகத்தை
ஏனோ காணோம் !
தவித்தவள் பெற்றமனம்
கலக்கத் தோடு
'எங்கடியென் கண்மகளைக்
காணோம் ?' என்னும்
ஏக்கமுறு குரலோடும்
நுழைந்தாள் உள்ளே !

உள்ளேதன் செல்வமகள்
புயலிற் சிக்கி
ஒடிந்துவிட்ட வாழையெனத்
துவண்டு ரத்த
வெள்ளத்தில் பாவாடை
சேலை சட்டை
வெறிகொண்டு கிழித்திருக்க
மூர்ச்சை யுற்றுக்
கொள்ளையிட்ட பெட்டியைப்போற்
கிடந்தாள் கண்டு
கோவென்ற கதறலொடு
நெருங்கத் தாய்மை
அள்ளித்தன் மடியிலிடப்
போமுன் சற்றே
அங்குமிங்கும் வெறித்தவளாய்ச்
சுற்றிப் பார்த்தாள் !

பார்வைகடுஞ் சினங்கொண்ட
புலியை மிஞ்சும் ;
பசியெடுத்த ஓநாயின்
வேட்கை தோற்கும் ;
'யார்இதற்குப் பொறுப்பிங்கே ?
பாவி ! கொல்லும்
யமனேதான் ஆனாலும்
குடிப்பேன் ரத்தம் !
ஊர்இதற்குப் பதில்சொல்ல
வேண்டும் ; இன்றேல்
ஒருகோடியில் இவ்வூரே
சாம்ப லாகும் ;
நேரிலவன் வருவானேல்
பிளப்பேன் நெஞ்சை !
நிர்மூல மாக்கிடுவேன் !'
என்றாள் அங்கே !

அங்கேஓர் மூலையிலே
வேம்பன் நின்றான்
அவசரமாய் ஓடிவிடும்
முயற்சி யோடே ;
'எங்கேடா நழுவிவிடப்
பார்க்கின் றாய்நீ ?
இழிமகனே ! கொலைகாரா !'
என்றே கேட்டுச்
சங்கொத்த அவன்கழுத்தைக்
கடிக்கப் பாய்ந்தாள் !
சாகசமாய்த் தப்புதற்கு
முயன்றான் ; ஆனால்
சிங்கமெனப் பாய்ந்தஅவள்
பாய்ச்சல் முன்னே
சிறுநரியாய்ச் சின்னவனும்
சிக்கிக் கொண்டான் !

கொண்டமட்டும் மார்புகரம்
கழுத்தை எல்லாம்
கூர்பல்லால் சதைகவ்வி
முகத்தில் துப்பிப்
பண்டிருந்த மாகாளி
தானே யாகிப்
பாய்ந்தங்கு மணையரிவாள்
கையிற் கொண்டாள்.
கண்டஅவன் மிகப்பலமாய்
விசும்பிக் கொண்டு
கட்டறுத்த கழுதையெனக்
குருதி சொட்டத்
தொண்டையிலே நீர்வறள
மூச்சு வாங்கத்
தொடைநடுங்க ஓடுவதைப்
பார்த்தாள் அத்தாய் !

தாயங்கே தலைதெறிக்க
ஓடு கின்ற
தறுதலையைச் சினம்பொங்கக்
கணமே பார்த்துப்
போயங்கே யேகொன்டு
வரத்தான் எண்ணிப்
புறப்பட்டாள் ; ஆனால்தான்
அன்பாய்ப் பெற்ற
சேயிங்கே கிடப்பதனை
நினைத்த போதே
சினமெல்லாம் துயராக
மாறப் பாய்ந்து
தாயங்கே மகளுள்ள
நினைத்தாள் கண்ணீர்
தரைநோக்கி அருவியெனப்
பெருக்கே டுக்க !

பெருக்கெடுக்கும் பாசத்தை
அடக்க வெண்ணாப்
பித்துமனம் மிகக்குழம்பத்
துயரம் பொங்கத்
தெருக்கதவைத் தாழிட்டே
உள்ளே சென்று
செம்பில்நீர் கொண்டுவந்தங்
கருகில் வைத்தே
உருக்குலைந்த மலராரம்
போலக் கோதை
உணர்விழந்து கிடக்கின்ற
உடைசீர் செய்து
மருளுற்றா ளாய்நடுங்கி
மகளைத் தூக்கி
மடிவைத்து நீர்தெளித்து
'அம்மா ! கண்ணே !

கண்ணேநீ ! வாழ்வதைநான்
பார்த்துப் பார்த்துக்
களிப்பதற்கே உயிர்வாழ்ந்தேன் !
அடியென் பெற்ற
பெண்ணேநீ ! நான்வாழா
வாழ்வைப் பெற்றுப்
பெருமைபெற மனக்கோட்டை
எழுப்பி வைத்தேன் !
மண்ணாகிப் போனதடி
சூறை இட்டு
மாசானம் ஆக்கிவிட்டான்
கொடிய பாவி !
கண்ணேநீ ! பேசம்மா,
பேசாய் !' என்று
கதறலொடு மகள்முகத்தை
அணைத்தாள் மார்பில் !

மார்பணைத்த பாசத்தின்
கதற லோடு
மதிமுகத்தைத் தான்வருடி
நீர்தெ ளிக்கச்
சோர்வணைத்த கோதைவிழி
வெறியின் பாய்ச்சல்
சூழ்கொடுமை யால்புதைந்த
நிலையில் நின்று
நீரணைத்த மொட்டிதழ்கள்
விரிதல் போல
நீள்விழியை மெல்லமெல்லத்
திறக்கக் கண்ணீர்
ஆறணையைக் கடத்தலென
நான்கு கண்ணும்
அருவியென நீர்பெருக்கி
ஒலியே இன்றி,

இன்றியமை யாதனைத்
தமிழர் பண்பின்
இலக்கியத்தில் காப்பியத்தில்
வரலாற் றேட்டில்
குன்றிவிடா மற்காக்கும்
உயிராம் கற்பைக்
கொள்ளையிட்டும் கடிபட்டும்
வந்த வேம்பன்
குன்றிட்டான் ; நலங்கெட்டான் ;
நோய்மே லோங்கிக்
குரைக்கின்றான் ; வெறிபிடித்துக்
கண்டோ ரெல்லாம்
நின்றதுபோல் நின்றிருந்து
கடிக்கின் றானாம் !
நிச்சயமாய் அந்நிலையும்
குணமா காதாம் !

ஆகாத சிகிச்சையினை
மருத்து வர்கள்
ஆறேழு பேர்சேர்ந்து
சோதித் துப்பின்
போகாத நோயென்றும்
வெளியில் விட்டால்
பொதுமக்கள் பாதிக்கப்
படுவர் என்றும்
நோகாத படியவன்றன்
கால்கை கட்டி
நூதனமாய் ஒருகுடிலில்
அடைத்துச் வைத்துச்
சாகாத படிகாக்கக்
குழுமி நோயின்
சாரத்தைக் காரணத்தை
ஆராய்ந் தார்கள்.

ஆராய்ந்து பார்த்தவருள்
    ஒருவன் 'ஏதோ
ஆவிவந்து கடித்ததுபோல்
    தெரியு தெ'ன்றான் !
ஆராய்ந்து மற்றொருவன்
    'நரியோ நாயோ
அரும்பசியாற் கடித்ததெ'ன்றே
    அறைந்தான் ! பின்னோன்
'அராய்ந்து காதலியும்
    வேட்கை மீறி
அன்பாகக் கடித்ததெ'ன்றான் ;
    அனுப வம்போல் !
ஆராய்ந்த பலன்தொடர
    நாட்கள் செல்ல
அவன்தானே தனைக்கடித்துச்
    சிரித்துக் கொண்டான் !

கொண்டதுயர் தீர்வதற்கு
    வழியும் இன்றிக்
கோதையொடும் தாய்சேர்ந்து
    கலங்கி நொர்ந்து
கண்டுரைக்க யாருமின்றி
    உரைத்தால் மானம்
காற்றோடு போகுமென
    எண்ணி எண்ணிக்
கொண்டிருக்கத் தற்கொலைக்கு
    மகள்போ காமல்
கூடத்தான் இரவுபகல்
    விழித்துக் காத்துக்
கொண்டிருக்கச் சிலநாட்கள்
    செல்ல ஆங்கே
கொல்லுமனத் துயரகற்றத்
    துணையிங் காரே !

# பூபாலன்

'துணையாரா ? நானேதான் !
ஆனால் என்றன்
துணையாலே பயனுண்டா ?'
எனுமிக் கேள்வி
கணையாகப் பாலனையும்
தாக்கும் நெஞ்சு
கலங்கிவிடும் இன்றந்தக்
கலக்கம் நீக்கத்
துணையாகத் தமிழரசுப்
பரிசுச் சீட்டில்
தொகையாகப் பெற்றுள்ளான்
பத்து லட்சம் !
இணையாக இலட்சியத்தின்
வளர்ச்சிக் காக
இப்பணத்தைச் செலவுசெய்ய
போகின் றானே !

போகின்றான் கலையூர்க்குப்
பாலன் ; அன்றோ
புதியகவி அரங்கேற
வந்த தற்கும்
போகின்ற இன்றுள்ள
மாற்றத் திற்கும்
பொருத்தத்தை எடைபோட
அவன்தான் உள்ளம்
நோகின்ற புண்ணோடு
சென்றோ னுக்கு
நோய்நீக்கிப் பலமனிதர்
பலமும் தந்தே
ஏகென்று சொன்னதுபோல்
உணர்வு பெற்றான்
எழுச்சியுடன் விடைகூறிப்
புறப்பட் டிட்டான் !

புறப்பட்ட மின்பாய்ச்சல்
வண்டி ஆங்கே
புல்லரிக்க ஒலியெழுப்பி
ஓட, நன்கு
தரப்பட்ட முதல்வகுப்பில்
தனித்த மர்ந்தே,
தகதகக்கும் ஒளிக்கதிரை
அடக்கி நீலம்
பெறப்பட்ட கவர்ச்சிவிளக்
கேற்றி, மெத்தை
போட்டிருந்த வசதியையும்
பார்த்து காற்று
வரப்பட்ட வழியுணர்ந்தே,
தலைய ணைக்கு
வாகாகப் படுப்பதற்கு
முயன்ற போது,

போதுமென்று கோதைக்கும்
அவன்நற் றாய்க்கும்
புதிதாக வாங்கிவைத்த
பொருளை மீண்டும்
ஏதுக்கோ பார்க்கஅவன்
நினைத்தான்! ஆவல்
எக்களிக்கப் பெட்டிதனைத்
திறந்த போது
மீதமுள்ள ரூபாய்கள்
வங்கித் தாளாய்
மினுமினுக்கும் உறையிருக்க
நோட்ட மிட்டே
ஈதுக்கே கோடானு
கோடி மக்கள்
இவ்விலகில் படும்பாட்டைக்
கணித்துக் கொண்டான்.

கொண்டாடு கின்றார்கள்
    பணமுள் ளோரைக்
கொள்கைநெறி கொண்டாட
    எவரு மில்லை !
பண்டார மானாலும்
    ஊரை ஏய்க்கும்
பகட்டாள னானாலும்
    கயவன் என்றே
கண்டான பின்னாலும்
    கவர்ச்சி யற்ற
கழுதையவன் ஆனாலும்
    தொழுநோய் பெற்றுக்
கொண்டாலும் அவனைப்போய்ப்
    புகழ வைக்கும்
குணமுள்ள பணமின்று
    பாலன் பாலே !

பாலின்றித் தாய்கலங்க
    மார்சு வைத்துப்
பயனின்றிச் சேய்துடிக்கப்
    படிக்கும் மூத்தோன்
நூலின்றித் தானழவே !
    மூன்றும் கண்டு
நொந்ததந்தை கண்கலங்க !
    நீயில் லாமல்
காலின்றிக் கண்ணின்றி
    மனித சாதி
கண்டவரி டம்பிச்சை
    கேட்க வைக்கும்
கீலியன்ன பணமேநீ !
    நெருப்பாய்ப் பற்றி
நீஏழை வாழ்வுதனை
    எரித்தாய் முன்னே !

முன்னேஉன் செயல்வேறு ;
பாலன் கைக்குள்
முடங்கியபின் உன்தன்மை
முற்றும் வேறு ;
பன்னாளுன் கொடுமைக்கே
ஆளா னோர்க்குப்
பரிவோடு அருள்புரிய
அவன்பால் உள்ளாய் ;
என்னேஉன் சாகசங்கள் !
மழைநீர் போல
ஏற்றநில நிறமாறும் ;
பணமே ! நல்லோர்
பின்னேஉன் துணையிருந்தால்
கொடுமை போக்கும்
பெற்றிதனைச் செய்யவும்நீ
பயனாம் அன்றோ ?

அன்றவனும் ரயிலேறப்
பட்ட பாட்டை
அலுங்காமல் சென்றிடுமிச்
சுகத்தி னோடே
ஒன்றாகச் சீர்தூக்கின்
பணமே இந்த
உலகநிலை மாற்றுவதை
உணர லாமே !
ஒன்றோடு பலவாக
நெரித்துக் கொண்டு
ஓடுரயில் ஓரத்துக்
கம்பி பற்றி
மன்றாடின் இடமில்லை
வௌவால் போல
மக்களொடு தொங்கியன்றோ
சென்னை வந்தான் !

வந்தஅந்தப் பூபாலன்
நிலைமை மாற்ற
வரவேற்று வற்புறுத்திப்
பரிசுச் சீட்டைத்
தந்தஅந்தச் சிறுவனையும்
மனத்துள் எண்ணித்
தன்னிலையும் உடனெண்ணி
எடைபோட் டிட்டான்;
முந்திவந்த வறுமைதனைச்
சீட்டு விற்று
முறியடிக்கும் முயற்சியுள்ள
அவனை மீண்டும்
எந்தவொரு சூழ்நிலையில்
கண்டன் னோனின்
ஏழ்மைதனை நீக்குவதென்
றெண்ண லுற்றான்.

'உற்றவராய் எண்ணியஅம்
மகட்கும் தாய்க்கும்
உரியதென வாங்கிவைத்த
அன்ப ளிப்பைச்
சற்றேனும் தயங்காமல்
கொடுப்ப தைத்தான்
தவறாக அவர்களுமே
எடைபோட் டிட்டால்'
சுற்றமென நாம்பழகும்
உயர்ந்த நட்பில்
தொய்வுவந்து சேர்ந்திடுமே'
என்று நெஞ்சுள்
முற்றாத புதுக்கவலை
முளைக்கப் பெற்று
மூளையையும் தொட்டிலிட்டுத்
தாலாட் டிற்று!

தாலாட்டும் கவலையொடு
உறங்கி விட்டான் ;
தடுமாறும் அவனறிவில்
கனவு மொன்று
நூலாட்டம் ஆடிற்று
உண்மை யைப்போல்
நோக்கியிருந் துறக்கத்தில் ;
அவ்வூ ருக்குள்
வாலாட்டும் பொலிகாளை
சுற்றும், ஊரார்
வயலெல்லாம் மேய்ந்துவிடும்,
உழுதோன் கண்டு
கோலாட்டி விரட்டிவிடில்
பயந்தோ டாது
கொம்பாட்டிப் பாயவரும்
கோயில் காளை !

காளையின்மேல் ஊரார்க்கே
அளவில் லாத
கடுங்கோபம் ; அதைப்பிடிந்தே
அடக்கிக் கட்டும்
நாளைஎதிர் பார்த்துக்கொண்
டிருந்தாற் கூட
நடுக்கந்தான் மனத்திற்குள் ;
அடக்கு கின்ற
ஆளையது பாய்ந்துவிடும்
என்னும் அச்சம்
அல்லவொரு காரணமாம்
அதுவோர் தெய்வக்
காளையன்றோ ? அதையடக்கின்
தெய்வத் தைத்தான்
கட்டியதற் கொப்பென்ற
மடநம் பிக்கை !

"நம்பிக்கை மிகத்தேவை !
ஆனால், ஞானம்
நசுக்கிவிடும் நம்பிக்கை
நஞ்சுக் கொப்பாம் !
கும்பிக்கே உணவளிக்கும்
பயிரை மேயும்
கொடுங்காளை தனையடக்கல்
தெய்வத் தின்மேல்
நம்பிக்கை உள்ளவரை
எதுவும் செய்யா
நம்புங்கள் என்னுரையை !"
என்று பாலன்
தெம்புக்கை உயர்த்தியவன்
பேசக் கேட்டும்
தெருமக்கள் சிந்திக்க
மறுக்கின் றார்கள் !

மறுக்கின்ற மாந்தருளோர்
ஆவும் கன்றும்
மனிதருளும் தாமதிகம்
அறிவு பெற்ற
செருக்குடனும் கூர்மைமிகு
கவனத் தோடும்
செவிசாய்த்து நிற்கிறது !
பாலன் பேச்சு
உருக்கமுடன் தொடர்கிறது !
கோயில் காளை
ஓடிவந்து கன்றதனை
முட்டி வீழ்த்த
மறுகணத்தில் பசுப்பாய்ந்து
கொம்பி னாலே
மார்புகுத்தி வீழ்த்திற்றுக்
காளை தன்னை !

தன்னையொரு பசுகொம்பால்
கிழிக்க ரத்தம்
தாரையெனக் கொட்டஅவ
மானம் தாக்கப்
பின்னையொரு முறையெழுந்தே
உலாவா வண்ணம்
பெருநோயில் வீழ்ந்ததந்தக்
காளை ! பாலன்,
என்னவொரு கனவிது ?'
முன்பின் தம்முள்
'எந்தவொரு தொடர்புமிலா
தென்றே எண்ணித்
தன்னையுமோர் உணர்வெழுப்ப
எழுந்தான் தஞ்சைச்
சந்திப்புப் பெயர்ப்பலகை
தெரியக் கண்டான் !

கண்டவுடன் சுறுசுறுப்பாய்
எழுந்து பெட்டி
கரத்தெடுத்து ரயில்நிலைய
வெளியில் வந்தே
அண்டையுள நறுந்தேநீர்க்
கடையில் குந்தி
ஆவியெழும் தேநீரைச்
சுவைத்து நாக்குச்
சுண்டலுடன் அலுப்புமுள
சோம்பல் விட்டுச்
சுவர்பார்த்தான் வைகறையின்
ஐந்தாம் என்று
பெண்டுலத்தால் ஒலித்தமணிப்
பொறிசொல் லிற்று ;
பூபாலன் நடந்திட்டான்
கலையூர் நோக்கி.

நோக்கங்கள் பலவற்றை
    நெஞ்ச ராட்டை
நூற்றெடுக்கச் சுழற்றிவிட்டுச்
    சென்றான்! நேர்மை
ஆக்கங்கள் இல்லாத
    செயலும், ஆயும்
அறிஞர்கள் இல்லாத
    அவையும், பொய்ம்மை
நீக்கங்கள் இல்லாத
    நட்பும், அன்பும்
நிலைக்களனாய் இல்லாத
    வாழ்வும், பண்பின்
தேக்கங்கள் இல்லாத
    உறவும், நாட்டில்
தீர்க்கவழி தேடியுடன்
    நடந்தான் பாதை!

பாதைதஞ்சை நகரெல்லை
    தாண்டப் பச்சைப்
பயிர்விளைச்சல் இருமருங்கும்
    குலுங்கும் காட்சிப்
போதைகொஞ்சம் தலைக்கேறிக்
    கிறங்கு கின்ற
புதியகுடி காரரையும்
    நினைவூட் டிற்று;
காதைமிஞ்சும் குளிர்காற்றைத்
    தடுக்கத் துண்டால்
கவிபார தித்தலைப்பா
    கட்டிக் கொண்ட
மேதைதஞ்சம் புகுநெஞ்சான்
    விடிவி ருட்டில்
மெருகேற்றும் செவ்வான
    அழகை யுண்டான்!

உண்டுண்டாம் என்றிந்த
இயற்கை அன்னை
உலகத்திற் கூட்டுகின்ற
எழிற்கோ லத்தைக்
கண்டுண்டு களிப்பெய்தி
வியந்து போற்றிக்
கவிதையெனும் சிற்பங்கள்
வடித்து வைத்த
பண்டுண்ட பெருங்கவிகள்
கோயி லான
பனுவலுள பாடல்களும்
மனக்கண் முன்னே
துண்டுண்ட காட்சிகளாய்த்
தெரியக் கண்டு
துய்த்தவனாய் வழிநடந்தான்
விடியற் கூறில் !

வேறு

கூறிடும் நாளை
வேளை கூவிடும்
சேவல் ! மண்ணைக்
கீறிடும் உழவர்
தூக்கிக் கிழக்கினை
விழித்து நோக்கி
மீறிடும் பொழுதும்
என்று மிஞ்சிடும்
இரைகள் பேணிச்
சேறுடை எருதுக்
கெல்லாம் தீவனம்
போடும் நேரம் !

நேர்கையால் பிடிக்கக்
காம்பில் நிலவெனும்
குடைக்கீழ் மேகப்
போர்வையால் மூடக்
கண்ட புறப்படு
விடிமீன் தானே
பார்வையால் தவிக்கு
தென்றே பார்க்கிற
பறவைக் கூட்டம்
யார்கையால் தடுப்பார்
என்றே யாங்கணும்
அலறு தாமோ ?

தாமிக அலறி
ஓய்ந்த தவளைகள்
வரப்பின் நீங்கி
தாவின வயல்நீர்க்
குள்ளே தனியனின்
செருப்பி ருந்து
மேவின ஓசை
கேட்டு மிகுபயம்
கொண்டே ஆங்கே !
பூவின மதுவைத்
தேடிப் புறப்படு
வண்டு பாடும் !

பட்டெனச் சலச
லக்கும் பக்கமுள்
கால்வாய் நீரும்
கூட்டினுள் ளிருந்து
சோலை கூவிடு
குயில்க ளோடு

சீட்டிபோல் ஒலியுண்
டாக்கும் சிலஇனப்
புட்கள் சேர்ந்து
மீட்டிடும் இசையின்
வெள்ளம் மிதக்கும்
வைகறையின் இன்பம் !

இன்புற இயற்கை
யோடும் எழுகதிர்
வழியை நோக்கி
அன்புற வரவு
கூறி ஆர்த்தன
அகம கிழ்ந்தே
இன்புறா உயிரி
னங்கள் யாவுமே
மகிழ்ச்சி யாக
துன்புறும் நிலையை
எண்ணித் துடித்தன
கலையூர்ப் பக்கம் !

பக்கமவ் வூரைச்
சார்ந்த பளிங்குநீர்க்
குளத்தில் சாமம்
சிக்கிய பெண்கள்
வந்தே சிலர்துறை
கூடி தம்முன்
முக்கிய மாக
ஏதோ முணுமுணுப்
பேச்சில் மூழ்கத்
தக்கவச் சமயம்
பாலன் தனிவழி
வந்தான் அங்கே !

அங்குள பெண்கள்
    பேச்சும் அரைகுறை
        யாகக் காதில்
சங்கம மாவ
    தைத்தான் தவிர்த்தனன்
        ஏனென் றிட்டால்
மங்கையர் நாவின்
    ஆற்றல் மகத்துவம்
        உணர்ந்த தாலே !
இங்கவர்க கிரையா
    காமல் எட்டடூர்
        துறைக்குப் போனான் !



# அன்னம்மா

போயினவே உயர்கற்பு,
நிறைந்த நெய்யின்
புதியகுடம் பாறையுச்சி
மோதி னாற்போல் !
தாயினமும் மேய்ச்சலுக்கு
வெளியிற் போக,
தனித்திருக்கும் முயற்குட்டி
மோப்பம் தேர்ந்த
நாயினத்தின் வேட்டைதனில்
சிக்கி மாய்ந்து
நலிவுற்றுக் கிடப்பதனை
ஒக்க, ஆங்கோர்
பாயணையில் கசக்கியபூ
மாலை யைப்போல்
படுத்திருந்தாள் பூங்கோதை
விடியா முன்னம் !

விடியாமுன் விடியாமற்
போன வாழ்வை
விடிவளவும் எண்ணியெண்ணி
வெந்து நொந்து,
செடியாமுன் வேரறுத்த
கதலி வாழைச்
செடியைப்போல் கொடியைப்போல்
கிடக்க, கோதை
முடியாமுன் அலைகளெனும்
கூந்தல் கோத,
முகவடிவில் விடிவிளக்கின்
ஒலிகள் தாவ,
மடியாமுன் மடிதலையை
எடுத்து வைத்து
மதகுவிழி அன்னம்மாள்
பார்த்த போது,

போதொன்றும் சரியாகப்
புலர வில்லை ;
பூங்கோதை மௌனநிலை
அன்று தொட்டு
யாதொன்றும் மாற்றமிலை !
அவலக் கண்ணீர்
யார்வந்து துடைப்பார்கள் ?
இவ்வூ ரார்க்கோ
காதொன்றும் கேளாது ;
உளமும் பாறை !
கண்களுக்கோ பணப்பகட்டுச்
சாதி போர்வை !
ஏதொன்றும் துன்பமெனில்
கேட்போர் ஏழை
எட்டவுள புறம்போக்கில்
வசிக்கின் றோரே !

வசிக்கின்றார் எனும்சொல்லோ
சிலநா ளாக
வழக்கொழிய ஒருகுடிலில்
இரண்டும் கெட்டார்
புசிக்கின்றார் காற்றோடு
தண்ணீர் கொஞ்சம் ;
பொங்குவதாம் ஒருள்ளம் ;
மற்றோர் உள்ளம்
விசிக்காது புலம்பாது
விழிகள் கூட
விடுவதில்லை கண்ணீரை ;
வறண்ட பார்வை
ரசிக்காமல் உலகத்தை
மௌனம் நீக்க
ராப்பகலாய் முயன்றகதை
பெற்றாள் பாசம்

பாசமிகு தாய்மடியில்
தலையைச் சாய்த்துப்
படுத்திருந்தால் மலையொத்த
துயரம் எல்லாம்
வீசுமிகு கதிரொளியில்
பனியைப் போல
விலகிவிடும் என்பார்கள் ;
ஆனால் தீயன்
நாசமிகு கற்பழிப்புச்
செயலை எந்த
நற்றாயால் மீட்டுவிடக்
கூடும் ? தாய்மை
பாசமிகு மகள்காக்க
உயிரைக் கூடப்
பரிசளிக்கும் என்றாலும்
இழந்த கற்பு ?

கற்பொன்றே உயிரென்று
வாழ்ந்து' தன்னைக்
காதலித்த தூயவனைக்
கரம்பி டித்து,
பொற்பென்றே ஒருசெல்வி
ஈன்று, பின்னே
பூப்போலக் காத்தவனை
இழந்து, கைம்பெண்
விற்போன்று உடலுழைப்பைச்
சிந்திக் கல்வி
வேள்வியிலே புடம்போட்டு
மகளைக் காத்து'
'கற்பொன்றே உயிரென்று
வாழ்க நீயுன்
கணவனொடே !' எனவனுப்ப
நினைத்த அன்னம்,

அன்னத்தின் ஆவலெலாம்
கனவாய் அன்றி
அருங்கானல் நீர்கண்டு
ஓடி ஓடிப்
பின்னித்தான் காலிடறிப்
பாலை வீழ்ந்து
பிழைக்காது என்றநிலை
மானாய் ! அங்கே
தன்னைத்தான் தேற்றவொரு
மனிதன் இன்றித்
தவித்தேங்கும் தாகமிகும்
ஈரு யிர்க்கும்
தென்னையுந்தான் வளைந்தவிழ்ந்து
இளநீர் நல்கித்
தெம்புதரின் அதற்குவமை
உண்டோ அம்மா !

'அம்மா !'என் றேஅழைக்கும்
யாரோ அங்கோர்
அந்நியரின் குரல்கேட்ட
ஈரு யிர்க்கும்
சும்மாவே நடுங்கியதே
உடலோ டுள்ளம் ;
துணிவுதனை வரவழைத்துக்
கொண்ட அத்தாய்
கும்மிருளும் நீங்கவிலை,
விடியு முன்னே
கூப்பிடுவார் யாரென்று
பலவும் எண்ணிச்
சம்மதமே இலையெனினும்
எழுந்து வந்து
தாழ்ப்பாளைத் தாள்நீக்கிக்
கதவும் நீக்க

நீக்கமிலாப் பரிவோடு
தமிழில் நீந்தி,
நீக்கமிலாக் கவித்துவத்துள்
என்றும் மாந்தி,
நீக்கமிலா உயரெண்ணம்
நெஞ்சில் ஏந்தி,
நீக்கமிலா ஆதரவு
மொழிகள் சிந்தி,
நீக்கமிலாப் பரிவுடனே
சென்று வந்து,
நீக்கமிலா மற்கலக்க
நினைத்த பாலன்
தூக்கமிலா முகங்கண்டான்
துயரும் கண்டு
துடித்தவனாய், 'என்னம்மா ?'
என்று கேட்டான்.

கேட்டதனைக் கேட்கவிலை
தாயின் உள்ளம் ;
கேள்விக்கு அப்பாலே
உயர்ந்து நின்ற
கோட்டைதனை நன்குணர்ந்தான் !
அதுஇ டிந்து
குலைந்ததனை ஒருகணத்தில்
நினைக்கக் கண்கள்
பாட்டைதனைக் குழிவிழுந்த
கன்னம் போடப்
படபடத்த தேகாய்ந்த
உதடு ! நாவும்
மீட்டதனை விக்கலெனக்
கேட்ட பாலன்
மெய்சிலிர்த்தான் ; அக்குடிலுக்
குள்ளே வந்தான் !

வந்ததனை அறிந்தங்கே
அன்பு முந்தி
வரவேற்று இருக்கைதரும்
பாங்கும் இல்லை ;
அந்தமனை இயல்பாக
மகிழ்ச்சி பொங்கும்
அழகுமிகு கோலநிலை
அங்கே இல்லை ;
சொந்தமனை போலிருக்கும்
உணர்வும் இல்லை ;
சுடருமிழும் விடிவிளக்கில்
ஒளியும் இல்லை ;
இந்தநிலை ஏனென்று
கவிஞன் நெஞ்சில்
எழுந்துவந்த வினாக்களுக்கோர்
விடையும் இல்லை !

இல்லாமை விரட்டியவன் ;
மகிழ்ச்சி தேக்கும்
ஏற்றநிலை நிலைநாட்டம்
நிலையின் வந்தோன் ;
பொல்லாமை யானமிகக்
கொடிய சோகம்
புகுந்துள்ள குடிலதனில்
கோதை எங்கும்
இல்லாமை ஏனென்று
புரியான் ; பெற்றான்
ஏக்கமுடன் வினாக்குறியால்
பார்க்கத் தாய்மை
சொல்லாமல் புனல்விழியால்
சுட்ட ! பாலன்
சுடர்விழியும் மங்கிருளில்
துருவிற் றாங்கே !

அங்கேஓர் சக்திபெற்ற
கோயில் நின்று
அப்படியே திருடிவந்த
அம்மன் சிற்பம்
மங்கியதோர் நிலையினிலே
தனித்த வீட்டின்
மறைவாக வைப்பதற்குக்
கொண்டு வந்தே
இங்கேஓர் போர்வைதனில்
சுருட்டிப் பாயில்
இட்டதுபோல் பூங்கோதை
கிடக்கக் கண்டு
'சங்கதிஎன் ? கடுநோயா ?
இதற்கேன் நீங்கள்
சஞ்சலத்தில் மூழ்குவது ?
கவலை யுற்றே !'

'உற்றவரும் இல்லாத
கவலை ! வாழும்
ஊராரும் வெறுக்கின்ற
நோக்கு ! நாடும்
கற்றவரும் முன்வந்தே
உதவு தற்குக்
கடுமெதிர்ப்பு எல்லாமோர்
பக்கம் ! அன்பாய்ப்
பெற்றகுலக் கொடியுந்தான்
நோய்வாய்ப் பெற்ற
பெருங்கவலை ஒருபக்கம் !
தாக்கச் சோர்ந்து
முற்றிற்றோ எனக்கலங்க
வேண்டாம் தீதை
முடியடிக்க நாம்வளரப்
பொருளும் உண்டு !

உண்டென்று திறந்துபெட்டி
  நகையும் பட்டும்
ஒவ்வொன்றாய்ப் பிரித்துவைத்துப்
  பலலட் சத்தின்
துண்டொன்றைத் தாளாக
  எடுத்து ஆட்டி
''துயர்விடுக ! போமுயிரைக்
  கூட மீட்கும்
கண்டின்று தெம்புறம்மா !''
  என்றான் ; அன்னம்
''கற்பிதனால் மீளுவதோ ?''
  என்றாள் ; தீரும்
தொண்டையற விழிப்புனலும்
  பெருகக் கோதை
துயர்கதையைத் துயருளங்கள்
  பரிமா றிற்று.

பரிமாறப் பெற்றமனம்
  கருணை உள்ளம்
பரிவோடு செவிமடுக்கும்
  வேளை, மேனி
சரிபாதி உருகிவிட்ட
  கோதை சற்று
சாய்வாகத் தான்படுத்தே
  இதுநாள் மட்டும்
விரியாத விழித்தணலை
  இமைகள் நீக்கி
விரக்தியொடு விரித்தெரித்தான்
  மூச்சால் ! பெண்மை
புரியாத 'ஆணாய்'ஏன்
  இருந்தாய் என்று
புகன்றதுவோ அவள்விடுத்த
  வெப்ப மூச்சு ?

வேறு

முச்சற்றுப் போயிருந்தான்
பாலன், முடித்திட்டாள்
துயர்கதையை அன்னம் ;
பேச்சற்று இருந்ததந்தக்
கூடம், பெரியதொரு
சாப்பறையின் ஓசை
கூச்சலுடன் ஒப்பாரி
சேர்ந்து குடிகொண்ட
தவ்வூரைத் தீராக்
காச்சலுடன் படுத்தானாம்
பாவம் ! கதைமுடிந்து
போனானாம் வேம்பன்.

வேறு

"வேம்பனென்ற கருநாகப்
பாம்பு தீண்டி
விட்டதுஎன் பொன்மகளை !"
என்றே மீண்டும்
தீம்பறியாத் திருமேனி
படுக்கைப் பக்கம்
திரும்பித்தான் இருகரமும்
விரித்துத் தீட்டி
தேம்பியதன் குரலோடும்
விம்ம லோடும்
'தெருஊரு நாடெல்லாம்
இந்தச் செய்தி
பாம்புநஞ்சு நல்லுடலில்
பரவு தல்போல்
பரவியபின் என்மகளை
மணப்பார் யாரோ ?"

"மணப்பார்யார் கற்பழிக்கப்
பெற்றாள் என்று
மறுப்பவரைப் பற்றிஙிங்கு
நினைத்துக் கொண்டு
மணப்பார்யார் என்றென்னைக்
கேட்கா தீர்கள்
மன்னியுங்கள் ! தாங்களின்று
சரியென றிட்டால்
மணப்பவன்யான் ! பெண்கற்பு
உடலின் மீது
மறுப்போல ஒட்டிக்கொண்
டிருக்கும் என்று
தினைத்துணையும் நினைப்பவனை
முட்டாள் என்பேன் !
தெளிகற்பு உளத்திலன்றி
உடலில் அல்ல !"

உடலிலல்ல உயர்கற்பு
உளத்தில் என்றே
உறுதியுடன் பூபாலன்
சொன்ன சொற்கள்
திடமொழியாய்ப் பதிந்ததனால்
கோதை நெஞ்சைத்
திசைமாற்றி விட்டதுவோ ?
முடிவு சொல்ல
இடமில்லை என்றாலும்
தெளிவாய் உள்ளாள்
என்பதனை நன்குணர்த்த
எழுந்த மர்ந்தாள்
உடல்மெலிவில் கொடியானாள்
இன்னும் மிஞ்சி
உள்ளஉயிர் கொண்டெழும்பக்
கொண்டாள் அல்லல் !

# அன்னம்மா

அல்லலைச் சுமந்த
மேனி அடங்கி
நெஞ்சும் சற்றுத்
தொல்லையும் கலைந்த
தைப்போல் தோன்றிட
மெலப்பின் வாசல்
கொல்லையும் நடக்கக்
கண்ட கோதையை
வியந்தாள் பாச
எல்லையின் சிகரத்
தாய்தன் இருவிழி
தேக்கி நின்றாள்.

நின்றதைப் பார்த்த
பாலன் நினைவினில்
கோதை மேனி
அன்றலர் மலராய்
இல்லை ; ஆவியால்
உருவம் செய்து
மன்றிலே நடக்கக்
காணும் மக்களும்
வியக்கும் உள்ளம்
ஒன்றிய காட்சி
போல உணர்வினில்
நினைவைச் சூழ்ந்தான்.

சூழ்இருள் மிகுநே
ரத்தில் சுழல்விளக்
கன்ன இன்ப
வாழ்நறும் ஆவல்

கோதை வளர்மனம்
கறங்கு தாமோ ?
ஊழ்இருள் சூழ்ந்தால்
கூட ஓட்டிடும்
திறம்பெற் றாளோ?
பாழ்மருள் நீங்கி
னாற்போல் பசுமையோ
டொளிரப் பெற்றாள்.

பெற்றவள் மகிழ்ந்தாள்
நேர்ந்த பிழைதனை
ஊரார் யாரும்
முற்றிலும் அறிய
வில்லை மூடனவ்
வேம்பன் சொல்லி
சுற்றிலும் பரப்பு
முன்னே தொலைந்தனன் ;
மகளின் வாழ்வு
அற்றதோ ? இல்லை !
இன்று அவள்நடை
உடையில் மாற்றம் !

மாற்றமும் மிகிழ்வும்
பெற்ற மகள்நிலை
கண்ட அன்னை
ஏற்றமும் பெற்றாள் ;
ஆனால் எதையுமே
உண்ணாக் கோதைக்
காற்றலும் ஏதோ ?
பூவாம் அழகிய
வாய்தி றந்து
சாற்றிய ஒருசொல்
கூடத் தாய்செவி
விழக்கா ணாளே !

நாளையும் எண்ணி
னாள்தன் நன்மகள்
உணவு உண்ட
வேளையும் கணித்து
நொந்து வேதனை
கொண்ட அன்னை ;
ஆளையும் நெருங்கிச்
சென்று ஆறுதல்
சொல்ல அஞ்சி
மூளையும் கலங்கி
நின்று முடுக்கினான்
மணநாள் வேண்டி !

வேண்டிய நகையும்
பட்டும் வீட்டினில்
இருக்க ; பாலன்
ஈண்டிய பணமோ
மக்கள் எழுதலை
முறைக்குப் போதும்
ஆண்டிகள் இல்லை
இன்று அரண்மனை
வாழ்க்கை வந்து
தீண்டிடக் காத்தி
ருக்கத் திருமணப்
பணியோங் கிற்று !

உற்றவர் நண்பர் ;
கொள்கை உயர்நலம்
செறிந்த தோழர் ;
கற்றவர் அறிஞர் ;
செல்வர் கல்விநல்
காசான் ; முன்பு

பற்றலர் ; உழைக்கும்
மக்கள் ; பல்தொழில்
கலைஞர் ; ஆண்பெண்
சுற்றுள வெளியூர்
உள்ளூர் சொகுசுடை
இளைஞர் கூட்டம் !

கூட்டமும் கணிப்ப
தென்றால் கொள்ளிடம்
பொன்னி கூடி
கூட்டமும் நடத்து
தற்குக் குறிப்புடன்
கலையூர் தேங்க
நாட்டமும் கொண்டாற்
போல நறுமணம்
பந்தற் குள்ளே
ஆட்டமும் பாட்டும்
வாழ்த்தும் அறுசுவை
விருந்தும் காண,

காணவும் மகிழ்ந்தார் !
பாலன் கருத்தையும்
மதியாச் செல்வர்
ஆணவம் அடங்கி
இன்று அன்புடன்
புகழ வந்து
பேணவும் முன்னே
நின்று பெருமைபா
ராட்டிப் பின்பு
நாணவும் செய்தார் !
'அன்றி நாமினி
ஒன்றாம்' என்றார் !

என்றலைக் கேட்டுக்
குன்றா இளநகை
பணியச் சிந்தி
அன்றலர் மலர்கள்
கொண்டு அழகொளிர்
வண்ணம் செய்த
மன்றலில் பாலன்
கோதை மகிழ்மணக்
கோலம் பூண்டு
தென்றலில் தவழ்வ
தன்ன தேர்ந்தவர்
அழைத்து ஏக !

ஏகவும் இசைக்க
வாழ்த்து எழிலொலிக்
கருவி மொத்தம்
ஆகவும் முழங்கச்
சேர்ந்து அமர்ந்தனர்
மன்றல் மேடை ;
நோகவும் நெறித்த
கூட்டம் நூல்நெறி
அறிஞர் பேச்சில்
ஊகமும் உணர
வந்து உடனெதிர்
அமர்ந்து கொண்டார் !

கொண்டநற் கொள்கை
சான்றோன் கோதைதன்
திரும ணத்தை
மண்டலம் உவந்து
போற்ற மணவிழாத்
தலைவர் ஆரம்

சென்றுடன் திருநாண்
மாற்றம் சிறப்புற
நடத்தும் பாங்கைக்
கண்டுடன் மக்கள்
தங்கள் கைமலர்
வாழ்த்தித் தூவ !

தூவிய மலர்மா
ரிக்குள் தோரண
மன்றில் கொள்கை
மேவிய கவிஞன்
பக்கம் மேதகு
கற்பின் செல்வி !
காவியச் சுடராய்
ஒன்றக் கடிமண
வறைகாண் பாசம்
தாவிய நெஞ்சத்
தாய்மை தவித்திடக்
கண்ணீர் வீழ்ச்சி

வீழ்ச்சியா நெறிக்கு
பெண்மை வென்றதா ?
கயமை ஊழின்
சூழ்ச்சியா ? குழம்பும்
நெஞ்சில் சொல்லொணாக்
கவலை தாக்கா
மீட்சியா ? கைம்பெண்
அன்னம் மென்மகள்
மணக்கோ லத்துக்
காட்சியைக் கண்டுள்
வாழ்த்திக் கலங்குதல்
எதற்குச் சான்றோ ?

சான்றெனச் சொல்லிக்
கொள்ள தாலியே
பெண்மை வேலி !
முன்றென முடிச்சுப்
போடல் முன்னுள
பண்பைக் காட்டும்
ஈன்றதை இழந்த
அன்னம் எழில்மகள்
கழுத்தில் மின்னல்
போன்றதை மலர்க்குள்
கண்டு பூரிப்பும்
பயமும் பெற்றாள் !

பெற்றவள் கோதை
சோர்வைப் பிறரிடம்
மெதுவாய்ச் சொல்லி
உற்றவர் சான்றோர்
வாழ்த்து உரைகளை
நிறைவு செய்து
மற்றவர் விருந்துக்
கேக மங்கள
இசைமு ழங்க
முற்றுற மணவி
ழாநல் தம்பதி
சென்றார் இல்லுள் !

வேறு

இல்லுக்குள் நுழைந்தவுடன்
அங்குள்ள பெண்கள்
எதிர்பார்த்துக் காத்திருந்த
ஆவலுந்தச் சேர்ந்து
மல்லுக்கு வந்ததைப்போல்
மணமக்கள் சூழ்ந்து
மகிழ்தமிழில் நையாண்டி
சொகுசொலிகள் கூட்டி
சொல்லுக்குச் சுவையேற்ற
இருபிரிவாய் அமர்ந்து
சொந்தம்பா ராட்டுவதைக்
கேட்குமெனில் இல்தூண்
கல்லுக்கும் மகிழ்வுதரும்
கம்பனையும் மிஞ்சும்
கவிநயத்தின் நிறைவாழ்த்தைக்
கவிச்செவிகள் மாந்த !

மாந்தரினம் நூல்வடிவில்
பயிலாத கவிதை
மங்கையரின் வாய்மொழியில்
அழகெதுகை மோனை
பூந்தமிழின் சொற்கூட்டாய்க்
கருத்துவளம் சிந்தப்
புகல்கின்றார் ஒருபக்கம் ;
கோதைநலம் ஏற்றி
நீந்துமெழில் கற்பனையில்
பாமாரி மொழியும்
நெறிக்கவிஞன் திறமைகளை
மறுபக்கம் போற்றி
ஏந்தலென வருணிக்கும்
வாழ்த்துப்பா எங்கும் ;
எதிரொலிக்க மணவீட்டுப்
பந்தலிலே விருந்து !

விருந்துண்ணும் உறமுறைக்குள்
விதிவிலக்குச் செய்து
வெவ்வேறு குந்தலைப்பர் ;
கொடுநோயர் மனையில்
மருந்துண்ணும் பிரிவமைத்தல்
போலவ்வூர் பழக்கம்,
மக்களின ஒற்றுமையைப்
பந்திவைத்துக் கொல்லும் !
பருந்துண்ணும் இடத்தைவிடப்
பண்புகெடும் அங்கு
பகுத்தறிவுக் குலைவைக்கும்
சரித்திரத்தை மாற்றி
விருந்துண்ணும் காட்சிகளை
உள்ளூரார் அன்றி
வெளியாரும் போற்றிமிக
அகமகிழ்ந்து உண்டார் !

வேறு

உண்டவர்கள் களைப்பாறப்
பந்தல் குந்தி
உணவுவகைச் சிறப்புகளைப்
புகழ்ந்து பேசிக்
கொண்டவர்கள் தாம்பளத்தில்
எதிரே உள்ள
கொழுந்தான வெற்றிலையில்
நரம்பு நீக்கி
புண்டரிகச் சுருளலைபோல்
குவிந்த சீவல்
பிடியெடுத்து வாயிலிட்டு
மணக்கும் சுண்ணம்
சென்டதனைப் போலஇலை
தடவிக் கொய்து
சிவக்கும்வாய் வைத்துமென்று
மகிழ்ந்தி ருந்தார் !

மகிழ்ச்சியுடன் மணவாழ்வைக்
கலைத்து மேடை
மங்கலப்பா வாழ்த்துதலை
நிறைக்க இன்பப்
புகழ்ச்சியுடன் கலந்தவிதம்
நினைத்து உள்ளம்
பூரிக்கப் பரிசுபெற்று
மௌன நாண
நெகிழ்ச்சியுடன் வெளிவந்த
பெண்கள் கூட்டம்
நின்றதங்கே மணமக்கள்
உடையை மாற்றி
மகிழ்ச்சியுடன் இனிவெளியே
வருமென் றெண்ணி
மற்றவர்கள் எதிர்பார்த்தார்
வீட்டிற் குள்ளே !

உள்ளேதான் இருதுருவ
வெற்றி சேர்ந்தே
ஒன்றாக எழுந்திருந்த
நிலையில் ; மாலை
உள்ளேதான் சிக்கியுள்ள
திருநாண் பற்றி
ஒளிக்கரத்தால் ஒளிமங்கும்
விழிகள் ஒற்றி
உள்ளேதான் உயிர்கருகத்
துவண்ட மேனி
ஒண்கற்புக் கரசியந்த
உயர்ந்தோன் பாதம்
உள்ளேதான் முகம்புதைத்தான்
உயிர்நீங் கிற்று
உயர்கவிஞன் விம்மலொலி
ஊரார் கேட்டார் !

கேட்டவொலி கேட்காமல்
இருக்க எண்ணும்
கிலிபிடித்த நெஞ்சினளாய்
அச்சத் தோடு
கூட்டத்துள் மகிழ்பவள்போல்
அங்கும் இங்கும்
குறுக்குநடை நடந்துபணி
செய்த அன்னம்
தோட்டத்தில் யாதோர்
அலுவல் ஊடே
தொல்துயரக் காட்சிகளை
மனக்கண் கண்டு
வீட்டுக்குள் கவனமெலாம்
செலுத்த பாலன்
விம்மலொலி செவிமடுத்துப்
பாய்ந்தாள் வீட்டுள் !

வீட்டுக்குள் அருமைமகன்
கழுத்து மாலை
விரித்தணைபோல் பாலனடி
சேர்த்த தன்மேல்
போட்டுள்ள முகமலரைக்
கண்டு நெஞ்சில்
பொசுக்கிடுதீக் குளித்தவளாய்
அலறிப் பற்றி
மீட்டுள்ள கரம்சாய்த்து
மகளைப் பார்த்தாள்
மென்மலர்ப்பூங் கோதைமுகம்
மூச்சும் அற்றுப்
பாட்டுள்ள மகளானாள் ;
"மகளே ! உன்னைப்
பார்ப்பதினி எங்கம்மா ?"
என்றே வீழ்ந்தாள் !

வீழ்ந்தழுதாள் அன்னம்மா !
கலையூர் சுற்றி
விருந்தினராய் வந்தமக்கள்
திரண்டே அங்கே
சூழ்ந்தழுதார் ! மணக்கோலத்
தோடு மாய்ந்த
சுடர்க்கொடியாம் பூங்கோதை
இறந்த செய்தி
ஆழ்ந்தழுகும் பேதமதை
வளர்க்கும் ஊரார்
அனைவரையும் இத்துயரம்
வதைத்து வாட்டி
வாழ்ந்தழுகச் செய்தநிலை
காணும் நம்கண்
வடிப்பதுவும் வற்றாத
அருவி அன்றோ ?

அன்றங்கே கற்பரசி
அழகு மேனி
அடக்கத்தின் போதேதான்
துறவு பூண்டு
நன்றங்கே கல்லறையை
எழுப்பித் தூய்மை
நலஞ்சேர்க்கும் ஆசிரமம்
அமைத்துப் பாலன்
என்றெங்கே கற்பழிக்கப்
பெற்ற பெண்கள்
இங்குவந்து சேர்ந்தாலும்
தேற்றும் நல்ல
மன்றங்கே போற்றுகின்ற
சமுகத் தொண்டின்
மகளிரில்லம் பூங்கோதை
நினைவுச் சின்னம் !

*நிறைவு*

## 'கலைக்கூத்தன் கவிதைகள்'
## பற்றி
## ஏடுகள் எழுதுகின்றன

1. Under Sixty-five captions, he writes in vigorous style of land and language, damsel & love, wisdom and philosophy, verses from many angles, seminars and poetry, history & inventive genious.

*—S. V. Varadaraja Iyengar—'HINDU'*

2. In this collection, Kalaikoothan, a spirited lyricist, reflects new modernism. His nathology, brought out in a neat anthology, dwells on the aspirations of youth, among a medley of topics.

*—Bachu Visvanath-'Free Press Journal'*

3. இவரது கவிதைகள் சுவை மணக்கின்றன; அனைவரும் படிக்கத் தக்கது.

—'முரசொலி'

4. 'கருவி இல்லை', 'நானவளை' முதலிய கவிதைகள் மிகச் சிறப்பாக உள்ளன. மொத்தத்தில் நல்லதொரு கவிதைத் தொகுப்பு.

'தினமணி'

5. As a poet Kalaikoothan is a classicist. His diction is in the tradition of the Tamil Potery which claims a heritage of over two thousand years. In fact some of the involved metres used by him have been seldom used so skillfully since the times of Thayumanavar or Pattinathar.

*—T. M. P. Nedungadi—'M & M News Letter'*

6. சமூகப் பிரக்ஞை நிறைந்த இந்தக் கவிஞர், சமுதாயச் சீர்கேடுகளையும் இன்றைய அரசியல்வாதிகளின் மொறுப்பற்ற மோசமான குணங்களையும் பல கவிதை களில் சாடியுள்ளார்.

—'கௌதம நீலாம்பரன்' கலைக்கனல்.

7. சமுதாயத்தில் மலிந்துள்ள சீர்கேடுகளைச் சாடும் போது புயலாகின்ற கலைக்கூத்தன் கவிதைகள் காதலைப் பற்றிக் கூறும்போது தென்றலாக மாறிவிடு கின்றன.

—நாகை தருமன்—'நவமணி'

8. பல்வேறு தலைப்புகளில், பல்வேறு ஓசை நயத்துடன் பழகு தமிழில் பாடல்கள் எழுதியுள்ளார். நல்ல பாடல் கள் நல்லெண்ணத்தின் வெல்லப்பாகாக இனிக் கின்றன.

—கவிஞர் கோவேந்தன் 'தமிழம்'

9. வெறும் வறட்டுக் கூச்சலாகவோ, உபதேசங்க ளாகவோ இல்லாமல், அத்தனை கவிதைகளும் நயம் படவும் திறம்படவும் எழுதப்பட்டிருக்கின்றன.

—பவானிமைந்தன்—'ஏடு'

10. இவர்தம் பாடல்கள் சிலவற்றில் நாட்டுப் பற்றும் மொழிப்பற்றும் இனப்பற்றும் வெளியாவதோடு, நமது பண்பாடு சீரழியாமல் சிறக்க வேண்டும் என்னும் எண்ணமும் வெளிப்படுகின்றது. சிலேடை நயமும், கற்பனைப் பாங்கும், உவமை நயமும் பல இடங்களில் சிறப்பாக அமைந்துள்ளன.

—மு. சண்முகம் பிள்ளை—'நூலகம்'

11. மொழிப்பற்று என்ற தலைப்பில் கவிஞர்தம் முடிவுரைப் பாடலாகக் கூறவேண்டியதை முகவுரைப் பாட லாக்கிக் காட்டியிருப்பதே கவிஞரின் புலமை ஞானத் தையும், மொழிப்பற்றையும் பறைசாற்றுகிறது.

—புதியவன்—'சங்கொலி'

## POONGOTHAI—*Reveiw*

12. By Kavingnar Kalaikoothan; Copies can be had of Paari Nilayam, Broadway, Madras-1. Rs. 9/-

Like Science and Soceity, poetic genius also has advanced in modern times. Bharathiar, Desika Vinayakam Pillai and other have contributed to modern political and social themes by their poetic compositions, simple in style and rich in meaning. The story of poonkodai, the heroine, begins with an invocation to Mother-Tamil'. Poems on both the richness and wants of Thanjavur district follow. The description of Kalaiyur, as an ideal village of the Cauvery delta, the place where the story begins, is captivating Poonkodai is introduced as a learned, cultured and chaste woman. The hero Bhoopalan has been depicted as an orator in Tamil and as a patriot who won the first prize in a seminar by his speech on 'Laughter'. The author's observations on the pretended laughter of men hunting for power and prosperity for themselves and the cheerful faces of the ascetics who have nothing to aspire for in this world are appealing. Stanzas which bring out the idea that "Evil will never hinder pious people who have firm faith in God" have no clarity (page 232). The heroin who is introduced as a virtuous woman is lured into losing her chastity Yet Bhoopalan, the hero, comes forward and offers to marry her. But Poonkodai dies at the time of her wedding and thus the story ends as a tragedy.

On the whole, the poetic style is simple, appealing and lucid.

THE HINDU, November 14, 1978

13. ஏழைகளைக் கண்ணால் பார்க்க மறுக்கும் இறைவன் எங்கே இருக்கிறான் என்று வினவுகிறார் ஆசிரியர். போலி மதவாதிகட்குப் புரியாத விளக்கம் இது. போலிகள்தான் அறிவைப் பயன்படுத்துவதே இல்லையே!

—மு. குழந்தைவேலு—'எழுத்துலகம்'

14. "உள்ளத்தை எடுத்தெறிந்து பசப்பிச் சென்று
உள்ளுக்குள் கையூட்டு தந்தால், பெற்றால்
மெல்லஅவர் இருவரையும் பிடித்துக் கட்டி
மேதினியில் பறையறைந்து விளம்பிச் சுட்டுத்
தள்ளிடவும் வேண்டுமென்றேன்; சீர்தி ருத்தம்
தழைப்பதற்கு முதலிலிதைச் செய்ய வேண்டும்"
துள்ளுகின்ற உணர்ச்சிவரி இந்த நூலில்
தொடர்கிறது காட்டாறாய்; புரட்டிப் பார்ப்பீர்.

— புலவர் கபிலவாணன்— 'காவியப்பாவை'

கவிஞர் அவர்களின் கவிதைகளினூடே மின்னிமிளிரும் அடிப்படைகள் மூன்று. [1] தமிழ்மொழி உணர்வு. (2) குறள் நெறி. (3) சமுதாய உணர்வு.

ஆங்காங்கே புதிய சிந்தனைகளும், புதிய உவமைகளும் மிளிர்கின்றன. பல்வேறு சந்தங்கள் நடம்பயில்கின்றன ..

மொத்தத்தில் தமிழன்னைக்கு அணிவிக்கத்தக்க அணிகலன்களுள் இதுவும் ஒன்று.

— கு. மோகனராசு. 'மதிப்புரைமாலை'
சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு.

# இந்நூலாசிரியரின்
# பிறநூல்கள்

| | | |
|---|---|---|
| கலைக்கூத்தன் கவிதைகள் | 15 | 00 |
| மனிதனை நான் தேடுகின்றேன் | 15 | 00 |
| எதிர்நீச்சல் போடுகின்றேன் | 15 | 00 |
| கலைக்கூத்தன் தமிழிசைப் பாடல்கள் | 20 | 00 |

(இராக - தாள - சுரசக்குறிப்புகள்
பேராசிரியர், சங்கீத வித்துவான்
எஸ். இராமச்சந்திரன்)



அவ்வை பதிப்பகம்
**AUVAI PUBLICATIONS**
JN 1-8-11-'B' WING
SECTOR 9-VASHI
NEW BOMBAY-400 703.